# 360 டிகிரி - நேர்காணல்கள்

**ச.அன்பரசு**

arasukarthick@gmail.com தமிழாக்கம் - ***மின்னூல்***

## வெளியீடு : *FreeTamilEbooks.com*



பதிவிறக்கம் செய்ய -

http://FreeTamilEbooks.com/ebooks/360_degree_interview

□□ *மின்னூலாக்கம்* - *லெனின் குருசாமி* - gurulenin@gmail.com

This Book was produced using LaTeX + Pandoc

# பொருளடக்கம்

# ஆசிரியர் உரை

முத்தாரம் நேர்காணல்களின் அணிவரிசை குங்குமம் ஆசிரியர் கே. என். சிவராமன் அவர்கள் பொறுப்பேற்றதும் விறுவிறுவென தொடங்கியது. சிறுவர்களுக்கான பொதுஅறிவு நூல் என்றாலும் அறிவியல், அரசியலோடு நீங்காத தொடர்புகொண்டது என்பதில் தீவிரமான நம்பிக்கை எனக்குண்டு. அதன் விளைவாக, முத்தாரத்தில் அறிவியல்ரீதியான தகவல்களோடு, உலகில் நிகழ்ந்த அரசியல் செய்திகளும் இடம்பெறத்தொடங்கின.

குழந்தைகளின் அறிவும் தொடர்ச்சியாக தலைமுறைக்கு தலைமுறைக்கு அப்டேட்டாகி வருகிறது. இன்னும் பாப்பா பாட்டு, குழந்தைகளின் ஓவியம் என பிரசுரிப்பது நவீனகால அசுர அறிவுப்பசியைத் தீர்க்காது. முத்தாரம் நேர்காணல்களில் அறிவியல், மருத்துவம், உளவியல், வரலாற்று அறிஞர்கள், வெளியுறவுத்துறை அதிகாரிகள், ராணுவம், அரசு அதிகாரிகள் என பலரும் இடம்பெற்றுள்ளனர். முத்தாரத்தில் இடம்பெற்ற நேர்காணல்கள் அனைத்தும் இந்தியன் எக்ஸ்பிரஸ், பிபிசி, டைம்ஸ்ஆஃப் இந்தியா, ஃபவுன்டைன்இங்க், அவுட்லுக் உள்ளிட்ட பல்வேறு இதழ்களிலிருந்து தரவிறக்கியதுதான். உலகில் நடைபெறும் நிகழ்வுகளை தங்கத்தமிழில் எழுதுவதே லட்சியம். இன்னொருவரின் அறிவை, உழைப்பை கவர்ந்து பெயர் வாங்குவதாக மொழிபெயர்ப்பை பலரும் கருதுகிறார்கள். நான் செய்த மொழிபெயர்ப்பில் என்னுடைய கருத்தை எவ்விதத்திலும் வெளிப்படுத்தவில்லை. கட்டுரையாளர்களின் கருத்துக்கு தமிழில் எழுத்துவடிவத்துடன் அவர்களின் பெயரும் உரிய மரியாதையோடு முத்தாரத்தில் வெளியானது. இந்நூலினை உருவாக்க துணை நின்ற ஃப்ரீதமிழ்புக்ஸ் இணையதள ஒருங்கிணைப்பாளர் திரு. □னிவாசன் அவர்களுக்கும் அவரது குழுவினருக்கும் எனதன்பும் நன்றியும்.

அன்புடன் ச. அன்பரசு

# 1. காற்று மாசுபாடு நிச்சயமாக நுரையீரல் புற்றுநோயை ஏற்படுத்தும் !

***நேர்காணல்: டாக்டர் ஜே. சி. சூரி, நுரையீரல் சிகிச்சை வல்லுநர்.***



*நியூ டெல்லியின் சப்தர்ஜங் மருத்துவமனையில் பணியாற்றும் டாக்டர் சூரி, காற்று மாசுபாட்டால் இதயம் மற்றும் நுரையீரலில் கடுமையான பாதிப்புகள் ஏற்படும் என எச்சரிக்கிறார்.*

***காற்று மாசுபாடு நீண்டகால நோக்கில் என்ன பிரச்னைகளை ஏற்படுத்தும்? நுரையீரல் புற்றுநோய் ஏற்படவும் வாய்ப்புள்ளதா?***

*நிச்சயம் ஏற்படுத்தும். காற்று மாசுபாட்டால் காற்றில் உயரும் நைட்ரஜன், கார்பன் ஆகிய வேதிப்பொருட்கள் மெல்ல மனிதர்களின் நுரையீரலைத் தாக்கி புற்றுநோயை உருவாக்கும். இது இறுதி அபாயம் எனக்கொண்டால், இதயம் தொடர்பான நோய்கள் உப விளைவாக ஏற்படும். காற்று மாசுபாட்டால் குழந்தைகள் அதிகம் பாதிக்கப்பட வாய்ப்புள்ளது.*

***இதன் விளைவாக ஏற்படும் ஆஸ்துமா உள்ளிட்ட பிரச்னைகள் ஆபத்தானதா? ஆரோக்கியமாக உள்ளவர்களையும் அதிகம் தாக்குமா?***

*நுரையீரல் புற்றுநோய் என்பது எக்ஸ்ட்ரீம் நிலை. ஆனால் அதற்கு முன்பே நாள்பட்ட ஆஸ்துமா, நுரையீரல் அடைப்பு நோய்(COPD) உள்ளிட்டவை ஏற்படும்.*

வயதானவர்களுக்கு ஹைப்பர் டென்ஷன், நீரிழிவு ஆகியவை ஏற்படுவதோடு கர்ப்பிணிகளுக்கும் சர்வ நிச்சய பாதிப்பு உண்டு. சிறுவர்களுக்கு நுரையீரல் வளர்ச்சி பெறும் நிலையில் காற்று மாசுபாடு அவ்வளர்ச்சியை தடுத்து மெல்ல அவர்களை சுவாச நோயாளிகளாக மாற்றுகிறது. ஏறத்தாழ இன்று இந்தியாவில் 10% சிறுவர்கள் நுரையீரல் தொடர்பான நோய்களால் பாதிக்கப்பட்டுள்ளனர்.

**பனிக்காலங்களில் காற்று மாசுபாடு என்பது அதிகரிக்கிறதா? சூழல் என்பது காற்று மாசில் முக்கிய பங்கு வகிக்கிறதா?**

நமது காற்று மண்டலத்தில் 20 கி. மீ. தொலைவுக்கு ஓசான் படலம் புற ஊதாக்கதிர்களிலிருந்து நம்மை பாதுகாக்கிறது. ஆனால் நிலப்பரப்பில் ஏற்படும் மாசுக்களை தடுக்க நமக்கு எந்த கவசமும் கிடையாது. carbon monoxide, sulfur dioxide, nitrogen dioxide ஆகியவை காற்றில் எக்கச்சக்கமாக அதிகரிப்பதால் நாம் சுவாசிப்பதற்கு அவசியமான ஆக்சிஜனின் அளவு குறைகிறது. வாகனங்களின் கரிம எரிபொருட்களால் உருவாகும் கார்பன் மோனாக்ஸைடு நம் உடலின் ஹீமோகுளோபினில் கலக்கும்போது உடல் இயங்குவதற்கான ஆக்சிஜன் கிடைக்காமல் போகிறது இந்நிலையில் மாரடைப்பு,நெஞ்சுவலி ஆகியற்றினால் பாதிக்கப்படுவார்கள்.

**காற்று விஷமாவதற்கு முக்கிய காரணம் என்ன?** பயிர்கள்,மரங்களை எரிப்பது, வாகனங்களின் பெருக்கம், நிலக்கரி சார்ந்த தொழில்கள் என அனைத்துமே இதற்கு காரணம். குறிப்பிட்ட காரணம் என ஒன்றை மட்டும் சொல்லி இதனை சுருக்கிவிட முடியாது. மாசுபாட்டை குறைப்பதற்கான தீர்வை நோக்கி நாம் நகரவேண்டிய அவசியமிருக்கிறது. டெல்லியை விட்டு இடம்பெயர்வது இதற்கு தீர்வல்ல. கடற்புர நகரங்களில் காற்று மாசுபாடு சிறிது குறைவாக இருக்க சான்ஸ் உண்டு. பனிக்காலங்களில் சுவாச நோயாளிகளின் எண்ணிக்கை அதிகரிக்கத் தொடங்கியுள்ளது.

**காற்று மாசுபாட்டிலிருந்து தப்பிக்க ஏர் ப்யூரிஃபையர்கள் உதவுமா?**

வெளியில் 48 டிகிரி செல்சியஸ் என்றால் வீட்டில் ஏசியை கூட்டி வைத்துக்கொண்டு இருக்கிறீர்கள். ஏர் ப்யூரிஃபையரின் பணியும் அப்படித்தான்.

காற்று அனைவருக்கும் பொதுவானதுதான். காற்றின் மாசுபாட்டு அளவை குறைத்து உங்களுக்கு வழங்கும் திறன் அவற்றுக்கு உண்டு என்பதை உணர்ந்து பயன்படுத்துங்கள்.

நன்றி:Lola Nayar,Outlook தொகுப்பு: ஷியாம் பானர்ஜி, இந்தர்சிங்

## 2. வரலாற்றிலிருந்து எதையும் கற்க நாம் விரும்பவில்லை

***நேர்காணல்: மாதவ் கோட்போலே, முன்னாள் உள்துறை செயலாளர்.***



*பாபர் மசூதி இடிப்பின்போது மத்திய அரசின் உள்துறை செயலராக பணியாற்றியவர் மாதவ் கோட்போலே. பாபர் மசூதி இடிப்பின்போது நடந்த கலவரத்தினால் மனம் வருந்தி பதவியை ராஜினாமா செய்து வெளியேறியவர் மாதவ்.*

***பாபர் மசூதி இடிப்பிற்கும், அதன் பின்னர் நடந்த கலவரத்திற்குமான காரணங்களாக எதை குறிப்பிடுவீர்கள்?***

*குறிப்பிட்ட மதத்தை தாக்கி பேரழிவு ஏற்படுத்தி தாக்குதல் சம்பவம் அது. மாநில அரசு நினைத்திருந்தால் மத்திய அரசின் ராணுவத்தை கோரி கலவரத்தை அடக்கியிருக்கலாம். ஆனால் மாநில அரசு, காவல்துறையின்மேல் அதீத நம்பிக்கைக்கு நாம் பெரிய விலையை தரவேண்டி இருந்தது. இதில் கரசேவகர்களின் பங்கு அதிகம் என்றாலும் அதற்கான கான்க்ரீட் ஆதாரம் கிடைக்கவில்லை. மாநிலத்தில் ஏற்பட்ட கலவரத்தை அடக்க ஜனாதிபதி ஆட்சியை அமல்படுத்த முயன்றும் அத்திட்டம் நிறைவேறாமல் போனது துரதிர்ஷ்டம்.*

***அரசின் சக்தியையும் மீறி கலவரம் சென்றுவிட்டதாக நினைக்கிறீர்களா?***

*'நாட்டில் வன்முறை பெருகியபோது, மத்திய அரசு பாராமிலிட்டரி படை, ராணுவம்,உளவுத்துறை உள்ளிட்ட பல்வேறு அமைப்புகளை பயன்படுத்தி*

*நிலைமையை கட்டுப்படுத்த முயற்சித்தது. ஆனால் மாநில அரசின் அமைப்புக்குள் மத்திய அரசின் தலையீடு குறிப்பிட்ட வரம்புகளைக் கொண்டது. உளவுத்துறையில் எச்சரிக்கைகளைப் பெற்ற ராணுவம் தாக்குதல் பரவினால் தடுக்க தயாராகவே இருந்தனர். மசூதி இடிப்பு கலவரத்தின் விளைவாக மும்பையில் தொடர்விளைவாக குண்டுவெடிப்புகள் நிகழ்ந்தன.*

***இதனால் சமூகத்தின் இழைகளே அறுந்துவிட்டன என்று கூறலாமா?***

*மகாராஷ்டிராவில் குண்டுவெடிப்புகள் மிகமோசமான நிலையை ஏற்படுத்தி விட்டன. பிஜேபி ஆளும் மாநிலங்களான ராஜஸ்தான், மத்தியப்பிரதேசம், இமாச்சல், உத்தரப்பிரதேசம் ஆகிய இடங்களில் ஜனாதிபதி ஆட்சிக்கு உத்தரவிடப்பட்டதோடு கர்நாடகா,குஜராத் ஆகிய மாநிலங்களும் இதில் சுட்டிக்காட்டப்பட்டன. ஆனால் மகாராஷ்டிராவில் மாநில அரசு செயலிழந்துவிட, சிவசேனா கட்சி அரசு போலவே செயல்படத்தொடங்கிவிட்டது.*

***மசூதி இடிக்கப்பட்டபின் அதன் மறக்கமுடியாத விளைவாக இன்று எதனைக் கூறுவீர்கள். முன்பை விட நிலைமை ஏதேனும் மேம்பட்டிருக்கிறதா?***

*கடந்த 25 ஆண்டுகளாக பின்னோக்கி பார்த்தால் நமது பிரச்னைகள் எதுவும் மாறவில்லை. இன்றும் அரசியல் அமைப்பினால் உருவாக்கப்பட்ட அமைப்புகள் தொடர்ந்து தாக்கப்பட்டு வருகின்றன. மாநில அரசு தன் மாநிலத்திலுள்ள மசூதியை பாதுகாத்திருக்க வேண்டும். ஆனால் உயர்நீதிமன்றம், தேசிய ஒருங்கிணைப்பு கமிட்டி ஆகியவை தம் கடமையிலிருந்து தவறிவிட்டன.*

*இதுவரை ஆக்கப்பூர்வமான என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன சொல்லுங்கள் பார்ப்போம். உயர்நீதிமன்றம் உள்ளிட்டவற்றின் நடவடிக்கை புரியாத இந்தியனும் அரசு என்னதான் செய்கிறது? என கேள்வி கேட்பதை நாம் தடுக்க முடியாது. 2002 ஆம் ஆண்டு குஜராத்தின் கோத்ரா ரயில் எரிப்பில் மத்திய அரசு என்ன செய்தது? மீண்டும் அப்படி ஒரு பேரழிவு நிகழும் அரசு இறந்த காலத்தில் செய்ததைப்போலவே கையாலாகாத அரசாகவே நிற்கும் ஏனெனில் நாம் வரலாற்றிலிருந்து எதையும் கற்றுக்கொள்ள விரும்பவில்லை.*

*நன்றி: Prachi Pinglay Plumber,Outlook தொகுப்பு: விதேஷ் சக்ரவர்த்தி, சியாமளா பந்து*

## 3. பரிணாம வளர்ச்சியை கணிக்க முடியுமா?

**நேர்காணல்: ஜொனாதன் லோசஸ், உயிரியலாளர்.**



அமெரிக்காவின் புகழ்பெற்ற ஆராய்ச்சியாளரான ஜொனாதன், பரிணாம வளர்ச்சியை எளிதாக கணிக்க முடியும் என்பதோடு, டைனோசர்களின் அழிவு,வேற்றுகிரகவாசிகள் ஆகியவற்றைப் பற்றி தீர்க்கமாக உண்மைகளை ஆராய்ந்து வருபவர்.

**பரிணாம வளர்ச்சி பற்றிய ஆராய்ச்சியை ஏன் கையிலெடுத்தீர்கள்?**

வொண்டர்ஃபுல் லைஃப் நூலில் ஸ்டீபன்ஜே கவுல்ட், பரிணாம வளர்ச்சி என்பது விதியல்ல. அதனை நாம் மாற்றமுடியும் என்பதை தர்க்கப்பூர்வமாகவும், சோதனை வழியாகவும் உறுதியாக குறிப்பிட்டுள்ளார். கடந்த 30 ஆண்டுகளாக பரிணாம வளர்ச்சி குறித்த பல்வேறு செய்திகளை அறிந்துள்ளோம். இன்று ஸ்டீபன் கூறிய கருத்துகள் சரியா, தவறா என்ற நிலைக்கு வந்துள்ளோம். பரிணாம வளர்ச்சி பற்றிய சில கருத்துக்கள் அடாவடித்தனமானவை. ஸ்டீபன் கூறிய கருத்துகளை இன்று லேபிலும், களத்திலும் சோதிக்க முடியும். இயற்கையின் தேர்வு என்பது இன்று பொதுவான ஒன்று. லேபில் செய்யும் பரிணாம வளர்ச்சி சோதனைகள் இயற்கையில் நிகழ்வதை வேகமாக நிகழும். எனவே இயற்கை சூழலில் இச்சோதனையை நடத்தினால் உண்மையை அறியலாம்.

**பூமியில் மட்டும் பரிணாமவளர்ச்சி குறிப்பிட்ட காலத்தை எடுத்துக்கொண்டு**

***நிகழ்வது எப்படி?***

*என்னால் இந்தக்கேள்விக்கு பதிலளிக்க முடியாது. பால்வெளியில் பூமியை ஒத்த கோள்களை இன்று தேடி வருகிறோம். அப்படி கோள் ஒன்று கிடைத்தால் அங்கு வாழ்க்கையை தொடங்க முடியும் என்ற நம்பிக்கை மக்களுக்கு உருவாகியிருக்கிறது. உண்மையில் அப்படியொரு கோளை நாம் கண்டுபிடிக்காததற்கு காரணம்,அதனை எப்படி கண்டுடறிவது என்று தெரியாததுதான்.*

***பால்வெளியில் ஏதாவதொரு கோளில் பரிணாமவளர்ச்சி நிகழ்கிறது என்றால் உங்கள் ஆராய்ச்சி என்னவாக இருக்கும்?***

*பால்வெளியில் பல மில்லியன் நிலவுகள்,கோள்கள் உண்டு. அப்படியொரு கோள் கண்டறியப்பட்டால் அது தற்போது நாம் வாழும் பூமியைப் போல இருக்காது என்பது உறுதி. என்னுடைய யூகப்படி பூமியில் நாம் பார்க்கும் தாவரங்கள், விலங்குகள் அங்கு இருக்காது.*

***வேற்றுகிரக உயிரிகளின் புத்திசாலித்தனம் பற்றி உங்கள் கருத்து?***

*நமது அனுபவத்தை பொறுத்து அறிவு மேம்படுகிறது. நம் சமகாலத்திலுள்ள ஆக்டோபஸ், உயிரியல்ரீதியாக வேறுபட்டிருந்தாலும் அதன் கூர்மையான புத்திசாலித்தனம் நிரூபணமாகி உள்ளது. ஆனால் அவை மனிதர்களின் ஐக்யூ அளவைத் தொட்டுவிடவில்லைதான். ஆனால் அவற்றின் மூளையின் அமைப்பும் திறனும் கூட நம்மைவிட வேறுபட்டவை. எனவே வேற்றுகிரகவாசிகளின் அறிவுத்திறனுக்கு உருவமோ, மூளையின் அளவோ தடையாக இருக்காது.*

***உங்கள் ஆராய்ச்சியின் அடுத்தகட்டம்?***

*பரிணாம வளர்ச்சியை நாம் நம் கண்களால் பார்க்க முடியும் என்பதே பெரும் சாதனை. இ கோலி பாக்டீரியாவின் பரிணாம வளர்ச்சி 30 ஆண்டுகளாக நடந்து வருகிறது. பரிணாமவளர்ச்சி எப்படி மீண்டும் மீண்டும் தொடர்ந்து நடைபெறுகிறது என்பதை நாம் இந்த ஆராய்ச்சியில் பார்க்க முடியும். பகாமாவைச் சேர்ந்த பல்லிகள், நெப்ராஸ்காவைச் சேர்ந்த எலிகள் ஆகியவற்றிலும் நடைபெற்றுவருகிறது.*

இயற்கையில் பரிணாமவளர்ச்சி எப்படி தொடர்ச்சியாக நடைபெறுகிறது என்ற கேள்விக்கான பதில், இந்த ஆராய்ச்சியின் முடிவில்தான் இருக்கிறது.

*நன்றி:Ben Sykes, sciencefocus. com தொகுப்பு: விக்கி கௌசல், எலிசா ஜார்ஜ்*

## 4. நாட்டை வணிக சக்திகளிடம் ஒப்படைத்ததுதான் நமது தவறு

*நேர்காணல்: மனிஷ் சிசோடியா, துணைமுதல்வர் டெல்லி.*




*அண்மையில் ஹரியானாவின் குர்கானில் தனியார் பள்ளியில் படித்துவந்த ஏழுவயது சிறுவன் பள்ளியில் மர்ம முறையில் இறந்து கிடந்தது நாடு முழுவதும் பரபரப்பை ஏற்படுத்தியது. அரசுப்பள்ளிகளின் மேம்பாடு, பள்ளிகளுக்கான பட்ஜெட், ஆசிரியர்கள் குறித்து டெல்லி துணை முதல்வரும், கல்வி அமைச்சருமான மனிஷ் சிசோடியாவிடம் பேசினோம்.*

***அரசு பள்ளிகளைவிட வசதிகள் குறைவு என்றாலும் புதிதாக தொடங்கும் தனியார் பள்ளிகளில் தங்கள் குழந்தைகளைச் சேர்த்து படிக்க வைக்கவே பெற்றோர்கள் முண்டியடிக்கின்றனர். இந்த ட்ரெண்டை எப்படி பார்க்கிறீர்கள்?***

*எழுபதாயிரத்திற்கும் மேற்பட்ட மாணவர்கள் தனியாரின பட்ஜெட் பள்ளிகளில் படித்து வருகின்றனர். என்னுடைய அட்வைஸ், பெற்றோர்கள் அங்கீகாரமற்ற தனியார் பள்ளிகளை தவிர்ப்பதே நல்லது. இதற்கு தீர்வாக அரசு பள்ளிகளை முன்வைக்கலாம். 20புதிய அரசு பள்ளிகளைத் தொடங்கி, 8 ஆயிரம் கூடுதல் அறைகளை உருவாக்கும் தேவையுள்ளது. அடுத்த ஆண்டு பத்தாயிரமாக அறைகளின் எண்ணிக்கை உருவாக்கும் பிளான் உள்ளது.*

***டெல்லியிலுள்ள உள்ள அரசுப்பள்ளிகளின் திறன் என்ன?***

*டெல்லியின் ஆண்டுதோறும் பள்ளியில் சேரும் 2. 25 லட்சம் மாணவர்களில் தனியார் பள்ளிகளில் ஒரு லட்சம் மாணவர்களும் மிச்சமுள்ள 1. 25 லட்சம்*

*மாணவர்கள் அரசுபள்ளிகளிலும் சேர்கிறார்கள். 6-12 ஆம் வகுப்புகள் மட்டுமே டெல்லி அரசு கட்டுப்பாட்டில் உள்ளது தவறான ஐடியா. 1-12 ஆம் வகுப்புகளும் அரசின் கட்டுப்பாட்டில் வரவேண்டும். அரசு பள்ளிகளில் மாணவர்களின் எண்ணிக்கையை 3லட்சமாக உயர்த்துவதே எங்களது லட்சியம். டெல்லி எல்லையிலுள்ள லோனி,பகதுர்கார் பகுதிகளிலுள்ள அரசு பள்ளிகளில் ஒரு வகுப்பிற்கு 150 மாணவர்கள் படித்து வருகின்றனர். முனிசிபல் பள்ளியிலிருந்து டெல்லியிலுள்ள அரசு பள்ளிக்கு வரும் மாணவர்கள் பலருக்கு அவர்கள் எழுதும் எழுத்துக்களை அவர்களால் வாசிக்க முடியவில்லை, அவர்களால் எழுத்துக்களை பார்த்து எழுத மட்டுமே முடிகிறது என்பது சிறப்பான திறனல்ல.*

***தனியார்பள்ளிகள், அரசு பள்ளிகள் எவை சிறந்தவை என்ற விவாதத்திற்கு உங்களது பதில் என்ன?***

*அரசு-தனியார் பங்களிப்பு மாடல் சிறப்பானதல்ல. ரஷ்யாவிலுள்ள மாஸ்கோவிற்கு மாநாடு ஒன்றில் பங்கேற்றபோது, அங்கிருந்தவர்கள் இந்தியாவின் கல்வி மாடல்களை பார்த்து ஷாக் ஆனார்கள். ஆசிரியர்களுக்கு நல்ல சம்பளம் கொடுத்து அவர்களை நாம் பயன்படுத்த முடியும். வணிக சக்திகளிடம் நாட்டையே ஒப்படைத்துவிட்டதாகவே எனக்கு தோன்றுகிறது. நாங்கள் ஆசிரியர்கள் பணியில் சின்சியராக இருப்பதை உறுதி செய்யவும், மாணவர்களை தாக்குவது, வகுப்புகளை எடுக்காதது ஆகியவற்றுக்கு கடும் தண்டனை உண்டு என்பதை குறிப்பிட்டு பள்ளிகளுக்கு சர்க்குலர் அனுப்பி வைத்துள்ளோம்.*

***டெல்லியில் என்ன விதமான பயிற்சி திட்டங்களை கடைபிடிக்கிறீர்கள்?***

*Jeevan Vidya Shivir என்ற திட்டப்படி ஆசிரியர்களுக்கு ஏழு நாட்கள் பயிற்சி வழங்குகிறோம். தற்போது 50 ஆயிரம் ஆசிரியர்கள் பயிற்சி பெற்றுள்ளனர். இதில் 700ஆசிரியர்களை தேர்வு செய்து பல்வேறு பள்ளிகளுக்கும் அனுப்பி பிற ஆசிரியர்களுக்கும் பயிற்சி அளிக்கவிருக்கிறோம். விரைவில் ஆசிரியர்களுக்கான பயிற்சி நிறுவனம் ஒன்றையும் தொடங்கும் திட்டமுள்ளது.*

*நன்றி: BHAVNA VIJ-AURORA,Outlook*

## 5. இந்துத்துவாவின் அடுத்த குறி நான்தான்

***நேர்காணல்: எழுத்தாளர் காஞ்சா அய்லய்யா, எழுத்தாளர்.***

*தமிழில்:ச. அன்பரசு*



*கன்னடத்தின் முக்கிய எழுத்தாளரான காஞ்சா அய்லய்யா, ஹைதராபாத்திலுள்ள மௌலானா ஆசாத் உருது பல்கலைக்கழகத்தின் சமூககொள்கை ஆய்வு மையத்தின் இயக்குநர். 2009 இல் இவர் எழுதிய'Post Hindu India' என்ற நூலில் பிராமணர்கள், பனியாக்களைப் பற்றி'சமூக கடத்தல்வாதிகள்' என்று கூறிய கருத்துகள் கொலைமிரட்டல்கள் வரை புகழ் சம்பாதித்து கொடுத்திருக்கின்றன. அவரின் படைப்பு,கொலைமிரட்டல்கள், நூலின் சர்ச்சைக்குரிய பகுதி குறித்து அவரிடம் பேசினோம்.*

***"போஸ்ட் இந்து இந்தியா" பற்றி ஏகப்பட்ட சர்சைகள். இதுகுறித்து கூறுங்களேன்.***

*ஆர்ய வைசியர்களின் சங்கம் உருவாக்கிய புக்லெட்தான் சர்ச்சைக்கு காரணம். ஆங்கிலத்தில் வெளியான நூலின் தெலுங்கு மொழிபெயர்ப்பின்(2011) குறிப்பிட்ட பகுதியை நூலாக்கி பிரச்னை செய்கிறார்கள். இந்தி, மராத்தியில் வெளியாகியுள்ள இந்நூலின் மையம், தனியார்துறையில் ரிசர்வேஷன் தோல்வி அடைந்ததற்கான காரணங்களை பேசுகிறது. ஜாதிப்பொருளாதார கட்டமைப்பில் வைசியர்கள், சூத்திரர்களின் பங்கு அதிகம். அம்பானி,கிர்லோஸ்கர்,அதானி, லஷ்மி*

*மிட்டல் ஆகியோர் இப்படி உருவானவர்கள்தான். இந்தியாவின் வளங்களை ஆளுமை செய்வது இவர்களே. பிராமணர்கள் கோயில்களை ஆளுகிறார்கள். இதற்கு சிறந்த எ. கா: கேரளாவின் பத்மநாபசுவாமி கோவில். பனியாக்களும்,பிராமணர்களும் ராணுவத்தில் பங்களித்ததாக குறிப்புகள் இல்லை.*

***உங்களது புத்தகம் ஏன் இவ்வளவு சர்ச்சை ஆகியுள்ளது?***

*புத்தகம் பல நாளிதழ்களாலும் விமர்சனம் செய்யப்பட்டு நன்றாக விற்பனையாகிக் கொண்டுள்ளது. இதை படித்த வலதுசாரியினர் ஏன் இவ்வளவு தீவிரமாக எடுத்துக்கொள்கிறார்கள் என்று புரியவில்லை. இன்று இந்துத்துவ ஐடியாவை விமர்சிப்பவர்களை தொடர்ந்து கண்காணித்து அவர்களின் எழுத்தை அல்லது எழுதும் எழுத்தாளர்களையே கொல்வது இயல்பான சூழலாக இந்தியாவில் மாறியுள்ளது சரியானதல்ல.*

***எப்போது அச்சுறுத்தல்கள் தொடங்கின?***

*செப். 10 அன்று ராமகிருஷ்ணா, என் நாக்கை வெட்டி எறிவதாகவும் அச்சுறுத்தியதையடுத்து உஸ்மானியா போலீஸ் நிலையத்தில் புகார் பதிவு செய்திருக்கிறேன். பின் செப். 17 அன்று தெலுங்குதேச கட்சியைச் சேர்ந்த டிஜி வெங்கடேஷ், என்னை தூக்கிலிட்டு கொல்வதாக மிரட்டியதற்கு பின், பூபல்பலி சென்று வீட்டுக்கு திரும்பியபோது, கற்கள் ஆயுதங்களுடன் ஆர்ய வைசிய கூலிப்படையினர் என் காரை பின்தொடர்ந்து வந்தனர். அன்று நான் உயிர்பிழைத்ததே என் கார் டிரைவரின் சமயோசித புத்தியால்தான். இச்சம்பவத்தின்போது உஸ்மானியா பல்கலைக்கழகத்தின் சமூகவியல் பேராசிரியர் பீனாவேனி ராமையாவும் உடனிருந்தார்.*

***உங்கள் மீதான தாக்குதல் முயற்சிகள் இந்துத்துவ வெறியர்களின் முந்தைய தாக்குதல் சம்பவங்கள் போல் நிகழவில்லையே?***

*ஆர்ய வைசிய அமைப்பு என்பது அமைதியை வலியுறுத்துகிறது. அந்த அமைப்பின் தொண்டர்களை அவர்களின் அரசியல் தலைவர்கள் தூண்டிவிடுவதால் ஏற்படும் பாதகமே, தாக்குதல் முயற்சிகள் என்பதே என் கருத்து.*

***நீங்கள் உஸ்மானிய பல்கலையில் மாணவராக இருக்கும்போதே தீண்டாமைக்கு எதிராக "Why I Am Not A Hindu" என்ற நூலை எழுதியவர். அப்போது வராத அச்சுறுத்தல்கள் இன்று உங்களுக்கு வருகிறதா?***

*அன்று இதைப்போல சிக்கலான நிலை உருவாகவில்லை. 2002 ஆம் ஆண்டு சமூகத்தின் ஆன்மிக பாசிஸம் என்ற கட்டுரையை டெக்கன் கிரானிக்கல் நாளிதழில் எழுதினேன். அப்போது ஆட்சியிலிருந்த பாஜக அரசு, பல்கலையிடம் என் எழுத்தை தடுக்க கடுமையாக வற்புறுத்தியது. ஒரு சொற்பொழிவில் பிராமணர்கள் உற்பத்திதுறையில் ஈடுபட்டது வேதக்காலத்திற்கு பின்தான் என பேசியது கடுமையாக எதிர்வினைகளை உருவாக்கியது. என்னை துஷ்டன் என்று பலரும் தூற்றத்தொடங்கி, என் கொடும்பாவியையும் எரித்தார்கள். ஆங்கில கல்வி மீது தீவிரக்காதல் கொண்ட நான், என் ஜாதிப்பெயரை பெயரின் பின்னொட்டாக ஆங்கிலத்தில் சேர்த்துக்கொள்ளும் நிலை ஏற்பட்டுவிட்டது.*

*நன்றி:Shankar,frontline. in தொகுப்பு: அகாசி, கா. சி. வின்சென்ட்*

## 6. உலகின் ரோல்மாடல் இந்தியா மட்டுமே!

***நேர்காணல்: மெலிண்டா கேட்ஸ், கேட்ஸ் பவுண்டேஷன்***



*உலகநாடுகளிடையே தடுப்பூசி, வறுமை ஒழிப்பு என கேட்ஸ் பவுண்டேஷனில்செயல்பாடுக*
*கேட்ஸ் பவுண்டேஷனின் துணை நிறுவனரானமெலிண்டா கேட்ஸ், தொழில்நுட்பங்கள் எப்படி உ*
*வறுமை ஒழிப்பு என்பது ஐ. நாவின் முக்கிய மேம்பாட்டு திட்டம். இந்தியாவின் உத்தரப்பிரதேசம், பீகார் ஆகிய இடங்களில் கேட்ஸ் பவுண்டேஷன் பல்வேறு செயல்பாடுகளை வறுமை ஒழிப்புக்கு ஆதரவாக மேற்கொண்டு வருகிறது. மத்திய, மாநில அரசுகளிடம் நீங்கள் சமர்ப்பித்துள்ள திட்டம் பற்றி கூறுங்கள்.*
*மக்கள் எந்த சமூகத்தின் எந்தநிலையைச் சேர்ந்தவராக இருந்தாலும்ஆரோக்கியமான உடல்நிலை அ*

*கல்வி அறிவைப் பெற குறிப்பிட்டதொகையை அவர்கள் முதலீடு செய்வது காலத்தின் அவசி*
*அடுத்து, வங்கியற்ற இடங்களிலும் போன்களின் மூலமே வங்கிகளை எளிதாக அணுகும் வசதி, விவசாயத்தில் புதிய தொழில்நுட்பங்களை உட்புகுத்தி*
*காலத்திற்கேற்ப அதனைமேம்படுத்துவது ஆகியவற்றை நாங்கள் செயல்படுத்த ஆர்வமாக உள்ளே*

***உத்தரப்பிரதேசத்தில் ஆக்சிஜன் வசதியின்றி, 60 குழந்தைகள் இறந்த செய்தியை எப்படி பார்க்கிறீர்கள்?***

*செய்தியை முதன்முதலில் கேட்டபோது குழந்தைகளை இறந்த பெற்றோர்களின்துயரத்தை நி*
*இந்தியாவின் சிறப்பே, எப்படிப்பட்ட நிகழ்வாகஇருந்தாலும் அது உடனடியாக செய்தியாக வெளி*
*மருத்துவமனைகளில் நவீன கருவிகளை வாங்கி, சரியான நபர்களை பயிற்சியளித்துமருத்துவமனை*

*இந்தியாவின் மீதானநம்பிக்கையை நான் இன்னும் இழக்கவில்லை. மலிவான விலையில் தொழில்நுட்பங்களை மக்களுக்கு வழங்குவதில் கேட்ஸ் பவுண்டேஷன்தான் முன்னணி வகிக்கிறது.*

***தெலுங்கானாவில் கழிவறை வசதிகளை உருவாக்கி தந்தது போன்ற கண்டுபிடிப்புகளுக்கு உ ஊக்குவிப்பது எது?***

*இந்தியாவை ஆச்சரியாக பார்க்க காரணம், உலகநாடுகள் இந்தியாவின் உதவியின்றி சூழல் லட்சியங்களை அடைந்துவிட முடியாது என்பதே எதார்த்தம். இந்தியாஇன்று போலியோ நோய் இல்லாத தொடர்ந்து புது கண்டுபிடிப்புகளை அறிமுகப்படுத்தி வரும் நாடும் கூட. போலியோ நடவடிக்கையை உலகெங்கும் முடுக்கிவிட நம்பிக்கை கிடைத்ததே இந்தியாவிடமிருந்துதான். இந்தியாவில்தயாரிக்கப்பட்ட MenAfriVac என்ற இந்தியாவில் தயாரிக்கப்பட்ட மூளைக்காய்ச்சல்ம எனவேதான் உலகிற்கான மாடல்இந்தியா என்கிறேன்.*

***கிராமங்களை நீங்கள் கூறும் லட்சியதிட்டங்கள் சென்றடைய வாய்ப்பு இருக்கிறதா?***

*கலாசாரம் வேறுபட்டாலும் புதிய பயன்தரும் கண்டுபிடிப்புகளை அனைத்து மக்களுக்கும் கொண்டு சேர்க்கத்தானே வேண்டும். பெண்கள் தம் மருமகளுக்கு, மகளுக்கு சொல்லித்தரும் விஷயங்கள் அற்புதமானவை. இதுபோன்ற சுயஉதவிகளை பெண்கள் தமக்குள்ளே செய்துகொண்டு பல்வேறுதலைமுறைகளை உ. பியில் வீட்டிலேயேகர்ப்பிணிகளுக்கு பிரசவம் பார்ப்பதை பார்த்து வியந்திருக்கிறேன்.*

***கடந்தாண்டு இந்திய அரசு, தன்னார்வ நிறுவனங்களுக்கு அயல்நாட்டுஉதவிகளை மறுத்து ஆ கேட்ஸ் பவுண்டேஷன் நிதியுதவி பெறும்PHFI அமைப்புகள் கூட இதனால் பாதிக்கப்பட்டன. உங்களது செயல்பாட்டைஇவை எப்படி பாதித்தன?***

*பெரியளவு எங்களது செயல்பாடுகள் பாதிக்கப்படவில்லை. அரசு அங்கீகாரம் பெற்ற தன்னார்வ அமைப்புகளுடன் தொடர்ந்து நாங்கள் ஒத்திசைவுடன் பணியாற்றி வருகிறோம். நாங்கள் இந்தியாவில் பணியாற்றி வருவதுவெளிப்படையாக இம்முறையில்தான்.*

# 7. மியான்மரில் ரோஹிங்கயாக்களுக்கு நடந்தது மாபெரும் அநீதி

***பேராசிரியர் அஸீம் இப்ராஹிம்***



*மியான்மரில் ரோஹிங்கயா முஸ்லீம் மக்கள் ராணுவத்தினரால் தாக்கப்படும் நிகழ்வால் அவர்கள் இடம்பெயர்ந்து வங்கதேசம், இந்தியா இடம்பெயர்வது அதிகரித்துள்ளது. இதில் இந்தியா அகதி மக்களை ஏற்க மறுப்பது, ரோஹிங்கயா சிறுபான்மையினரின் வாழ்வு உள்ளிட்டவற்றைப் பற்றி அமெரிக்க ராணுவக்கல்லூரியில் புள்ளியில் துறை பேராசிரியராக பணியாற்றும் அஸீம் இப்ராஹிமிடம் இது குறித்து பேசினோம்.*

***ரோஹிங்கயா விஷயத்தில் ஆங் சன் சூகி எந்த நடவடிக்கையும் எடுக்காதது ஏன்?***

*சூகி அதிக நாட்கள் அமைதி பேண முடியாது. மிலிட்டரி, புத்த மதத்தினர் என இருவருக்கும் எதிரியாக அவர் விரும்பவில்லை. எனவே மௌனம் காத்துநிற்கிறார். இருதரப்பு வன்முறைக்கும் அவரே பொறுப்பேற்கும் அவலம் ஏற்பட்டுவிட்டது துரதிர்ஷ்டவசமான நிலை. சூகியின் ஆதரவாளர்களே ரோஹிங்கயா பிரச்னையில் முடிவெடுக்காததை கோழைத்தனமாகவும் அநீதியாக நடவடிக்கையாக கருதுகிறார்கள்.*

***சூகி ரோஹிங்கயா விவகாரத்தால் தனது நோபல் பரிசை திருப்பி அளித்துவிடுவாரா?***

*நோபல் பரிசு சூகி முன்னர் செய்த செயல்களுக்கு வழங்கப்பட்டது. ராணுவத்திற்கு எதிராக, மக்களுக்கு ஆதரவாக சூகி முன்னர் செயல்பட்டது*

*உண்மை. பிபிசியில் இன அழிப்பு நிகழவேயில்லை என்றாலும் மியான்மரில் நடந்த உண்மையை உலகம் அறிந்துவிட்டது.*

***இதில் இந்தியாவின் நிலைப்பாட்டை எப்படி பார்க்கிறீர்கள்?***

*சூகியை அண்மையில் சந்தித்த பிரதமர் மோடியின் எதிர்வினை பெரிய ஏமாற்றம். ஜனநாயக நாட்டின் தலைவரிடம் இதுபோன்ற தன்மையை நான் எதிர்பார்க்கவில்லை. ரோஹிங்கயா இனத்தவர் மீதான படுகொலையை தடுத்து நிறுத்த இந்தியா அழுத்தம் தந்திருக்க முடியும். ஆனால் இந்தியா மியான்மர் அகதிகள் இந்தியாவுக்கு வந்துவிடக்கூடாது என்ற எண்ணத்தில்தான் இருந்தது.*

***ரோஹிங்கயா பிரச்னைக்கு காரணம் என்ன?***

*ஐ. நா சபையால் அழிந்துவரும் இனத்தவர் என்று அறிவிக்கப்பட்ட ரோஹிங்கயா பிரச்னை இரண்டாம் போரிலிருந்து தொடங்குகிறது. அப்போதுதான் ஜப்பானியர்கள் பர்மாவுக்கு வந்தனர். பர்மா புத்த மதத்தினர் ஜப்பானுக்கு,ரோஹிங்கயாக்கள் ஆங்கிலேயருக்கும் ஆதரவு தந்தனர். ஜப்பான்-ஆங்கிலேயர் என இருதரப்பினர் போரில் ஆங்கிலேயர் வென்றனர். 1948 ஆம் ஆண்டு மியான்மர் சுதந்திரமடைந்த பிறகு புத்தம், ரோஹிங்கயா என இரு இனத்தவரும் வளர்ச்சி பெறத்தொடங்கினர். 1968 ஆம் ஆண்டு ராணுவ ஜெனரலான நே வின், ஆட்சியைக் கைப்பற்றி, கம்யூனிச வரைவுகளை அமுல்படுத்தினார். நாட்டின் பொருளாதாரம் சிதைந்ததோடு, சிறுபான்மையினர் மீதான தாக்குதல்களும் முதன்முதலாக தொடங்கின. புத்த மதத்தினர் மியான்மர் நாட்டினர் என்று பகிரங்கமாகவே அவர் கூறியது கடும் பகையை இரு தரப்பினரிடையே ஏற்படுத்தியது.*

***ரோஹிங்கயா மக்களின் வெளியேற்றம் என்ன விளைவுகளை ஏற்படுத்தும் என நினைக்கிறீர்கள்?***

*ஐ. நா அறிக்கைப்படி, 3 லட்சம் ரோஹிங்கயா இன மக்கள் வங்கதேசம் உள்ளிட்ட பிற நாடுகளுக்கு இடம்பெயர்ந்துள்ளனர். ரோஹிங்கயாக்கள் 1942 ஆம் ஆண்டு மியான்மருக்கு இடம்பெயர்ந்து வந்தவர்கள் என்பது ராணுவத்தின் உறுதியான எண்ணம். புது டெல்லியிலுள்ள இந்திய தேசிய இனங்கள் பற்றிய*

தொகுப்பில், 1824ஆம் ஆண்டிலிருந்து மியான்மரில் ரோஹிங்கயாக்கள் வாழ்ந்து வந்த தற்கான பதிவு உள்ளது. மியான்மர் அரசு, புத்த மதத்தை அனைத்து சிறுபான்மையினர் மீதும் மேலாதிக்கம் செய்ய விரும்புகிறது.

நன்றி: Pratigyan Das,TOI தொகுப்பு: ஹரி பன்னா, சுஷி குர்மா

# 8. நில நடுக்கங்களை முன்கூட்டியே தடுக்க முடியும்

**நேர்காணல்: ஜெயன் பெருமாள், நிலநடுக்க ஆய்வாளர்**



ஜெயன் பெருமாள் டேராடூனின் வாடியா புவியியல் ஆய்வை மையத்தில்பணிபுரியும் நிலநடு
இமாலயத்தில் ஏற்படும் புவியியல்மாறுதல்களை செயற்கைக்கோள், ஜிபிஎஸ் மூலம் கண்காணித்
சென்னை பிரசிடென்சி கல்லூரியில் புவியியல் முதுகலைப்பட்டம் பெற்றபெருமாள், முனைவர் ப
2002 ஆம் ஆண்டிலிருந்து வாடியா ஆய்வுமையத்தில் பணி.
தற்போது அமெரிக்க குழுக்களோடு இணைந்து ஆய்வுப்பணி செய்யும்பெருமாளோடு உரையாடி

**நிலநடுக்க ஆய்வு என்பது எந்தவகையில் முக்கியமானது?**

இமாலயத்தின் நிலத்தட்டு இந்தியாவில் மிக வேகமாக மாறும் தட்டுகள் என்பதால்நிலநடுக்க
மக்களின் அடர்த்தியும், விவசாயமும்இங்கு தொடர்ந்து அதிகரித்து வருவதும், திட்டமிடப்படாத க
நிலத்தட்டுகளின் மாறுபாட்டை ஜிபிஎஸ்புள்ளிகள் மற்றும் சாட்டிலைட் படங்கள், டோபோகிராபி

**மிகப்பெரிய நிலநடுக்கத்தின் அளவு என்ன?**

ரிக்டர் அளவு 8 க்கு மேலாக செல்வது மிகப்பெரிய நிலநடுக்கம் என்றுகுறிப்பிடுகிறார்கள். 7-7. 9 ரிக்டர் அளவு என்பது கடுமையான நிலநடுக்கம் எனலாம்.

**இமாலயத்தில் எவ்வளவு தூரத்திலிருந்து நிலநடுக்கம் தோன்றும்?**

பொதுவாக 20 கி. மீ ஆழத்திலிருந்து தோன்றும். இமாலயத்தின் கிழக்கு மற்றும் மேற்கு பக்கத்தில் முக்கோண வடிவிலான முனைகள் இதனை தூண்டுகின்றன.

*வில் வடிவில் உள்ள இமாலயத்தின் வடிவத்தில் பிற இடங்கள் தட்டையாக இருக்கும். எ. கா. ஹேர்பின்.*

**நிலநடுக்கம் நடந்த இடத்திலேயே மீண்டும் எதிர்காலத்தில் நிலநடுக்கம் ஏற்படவாய்ப்புண்ட**

*நிச்சயமாக. இந்திய மற்றும் ஐரோப்பிய தட்டுகளின் நகர்வுகள் இதனை தீர்மானிக்கும்.*

**ஓரிடத்தில் நிலநடுக்கம் ஏற்படும் அதேயளவு ஆற்றல், அதையொட்டிய மற்றொரு பகுதியில் வெளிப்படுவதில்லையே அதற்கு என்ன காரணம்?**

*பொதுவாக நிலநடுக்கத்தில் பெருமளவு ஆற்றல் உடனே வெளிப்பட்டுவிடாது. அதுகுறிப்பிட்ட காரணங்களை சார்ந்துள்ளது உண்மை. நகரில் ஏற்படும் நிலநடுக்கம்அதை சார்ந்துள்ள அனைத்து பகுதிகளிலும் உடனே ஏற்படுவதில்லை இதற்குகாரணம் என்ன என்பது குறித்த ஆய்வுகள் நடைபெற்று வருகின்றன.*

**இந்தியாவில் கண்டத்திட்டுகள் நகர்வுகளால் நிலநடுக்கம் நேர்ந்தால் மக்கள் எவ்வளவு பேர் பாதிக்கப்படுவார்கள்?**

*காஷ்மீரில் 7. 6 ரிக்டரில் நிலநடுக்கம் நிகழ்ந்தபோது மக்களின் இறப்பு 1 லட்சத்தைஎட்டியது. நேபாளத்தின் கோர்கா பகுதியில் நடந்த 7. 8 ரிக்டர் நிலநடுக்கத்தில் 9ஆயிரம் மக்கள் இறந்துபோன பிரம்ம புத்திரா கங்கை நீர்த்தடத்தில் நிலநடுக்கம் நிகழும்போது, 2005 இல் காஷ்மீரில் நடந்த நிலநடுக்க உயிரிழப்புகளைவிட அதிகமாக இருக்கும்.*

*நன்றி: www. fountainink. in தொகுப்பு: ராஜேஷ் பிரபுல்லா, கௌரி விஜய்*

## 9. நாஸ்காமைப் பற்றிய வதந்திகள் உண்மையல்ல

***நேர்காணல்: நாஸ்காம் தலைவர் ஆர். சந்திரசேகர்***



***ஐ. டி துறையில் வெளியேற்றப்படவிருக்கும் ஊழியர்களின் வேலையிழப்பை பற்றி என்ன கூற விரும்புகிறீர்கள்?***

*நான் அதனை ஐ. டியின் வீழ்ச்சி என்றோ, வேலையிழப்பு என்றோ கூற மாட்டேன். இது ஒரு மறுநிர்மாணம் நிகழ்வு அவ்வளவே. குறைவோ, அதிகமோ தொழில்நுட்பத்துறையில் இது மெதுவாகவேனும் நடப்பதை தவிர்க்க முடியாது. கடந்த மூன்று ஆண்டுகளில் இத்துறையில் 6 லட்சம் பேர் வேலைவாய்ப்பு பெற்றுள்ளனர். 2017 ஆம் ஆண்டின் காலாண்டில் 50 ஆயிரம் பேர் வேலைவாய்ப்பு பெற்றுள்ளனர். அடுத்து வரும் மூன்று ஆண்டுகளில் 2 லட்சம் பேர் தம் வேலையை இழக்கவிருக்கின்றனர். இது தொடர்ச்சியாக நடந்து வரும் நிகழ்வுதான். அமெரிக்கா மற்றும் ஐரோப்பாவிலும் வேலையிழப்பு உண்டு. தற்போது இதில் அரசியல் நுழைவதுதான் நிலைமையை மேலும் சிக்கலாக்குகிறது.*

***வேலையிழப்பை சந்திக்கும் ஊழியர்களை பதிவு செய்யும் டேட்டா பதிவேடு ஒன்றை நாஸ்காம் வைத்திருக்கிறதா? உண்மையில் அது வெளிப்படையாக தன்மை கொண்டதா?***

*வெளியுலகில் எப்படி நாஸ்காம் பற்றி வதந்திகள் உலவுகின்றன என்பதற்கு இதுவே சிறந்த உதாரணம். ஊழியர்களை கருப்பு பட்டியலில் வைப்பது, அதை வைத்து மிரட்டுவது ஆகியவற்றில் நாஸ்காம் இன்று*

*மட்டுமல்ல என்றுமே ஈடுபட்டதில்லை. சில ஊழியர்கள் சர்டிஃபிகேட்டுகளை டூப்ளிகேட் செய்வது போன்ற தவறுகளில் ஈடுபட்டால் அதன் மேல் நடவடிக்கை எடுப்போம். ஊழியர்களின் திறன் தொடர்பான எந்த பதிவேட்டையும் நாஸ்காம் பராமரிக்கவில்லை என்பதே உண்மை.* ***ஐ. டி துறையில் தொழிற்சங்கம் அமைப்பதை தொடர்ந்து எதிர்க்கிறீர்களே ஏன்?***

*தொழில்நுட்பம் சார்ந்த இத்துறை தொடர்ந்து மாறுதல்களுக்குட்பட்டது. எனவே இங்கு தொழிலாளர்கள் சங்கம் அமைப்பது என்பது அவசியமில்லை. தொழில்நுட்ப போட்டி உலகில் பல்வேறு மாறுதல்களுக்கு உங்களை அனுமதிக்காதபோது நீங்கள் நாளடைவில் தேங்கிவிடுவீர்கள் என்பதே உண்மை. 3% வேலையிழப்பை பற்றி பேசுகிறீர்கள். ஆனால் நான் 97% பேர் தங்களுடைய திறன்களை வளர்த்துக்கொண்டு வேலையில் தக்க வைத்துக்கொள்வதைப் பற்றி பேசுகிறேன்.*

***சங்கம் என்பது ஐ. டி துறையில் கடினத்தன்மையை ஏற்படுத்திவிடும் என நினைக்கிறீர்களா?***

*ஊழியர்களின் ஒருங்கிணைப்பை நான் வரவேற்கிறேன். ஆனால் நாஸ்காம் அதுபோன்ற அமைப்புதானே? ஐ. டி துறை என்பது தொழிற்சாலை போன்றதல்ல. இது பணியாளர்களின் மூளையை 60% பயன்படுத்தியே உருவாகியுள்ளது. அவர்கள் மகிழ்ச்சி சாத்தியமின்றி ஐ. டி துறை வளர்ச்சி எப்படி சாத்தியம்? 3% ஆட்களுக்கு ஏற்படும் பாதிப்புகளை காரணம் காட்டி 97% ஆட்களை கைவிடுவது சரியா?*

***ஐ. டி துறையிலுள்ளவர்களுக்கே நாஸ்காம் அமைப்பு குறித்து எதுவும் தெரியாத நிலையில் நாஸ்காம் எப்படி ஊழியர்களுக்கான அமைப்பாக செயல்பட முடியும்?***

*நாங்கள் வெறும் ஊழியர்களுக்கு மட்டுமல்ல, சமூகத்திற்கே முக்கிய பங்களிப்பு செய்து வருகிறோம். இதில் அனைவருக்கும் நாஸ்காம் தெரிந்திருக்க வேண்டும் என்பது இரண்டாம் பட்சமே. ஊழியர்களுக்கும் நிறுவனங்களுக்குமான பாலமாக செயல்படுகிறோம். வளர்ச்சி, விரிவாக்கம், புதிய திறமைகள், தொழில்நுட்ப திறமை கொண்ட பணியாளர்கள் ஆகியவற்றை நாஸ்காம் தொடர்ந்து கவனித்து வருகிறது. பல்வேறு கட்டுரைகள் இத்துறை வீழ்ந்துவிட்டது என அலறினாலும் இங்கு*

திறமையுள்ளவர்களுக்கு வேலைவாய்ப்புக்கு பஞ்சமில்லை என்பதே உண்மை.

*நன்றி: முத்தாரம் வார இதழ் தொகுப்பு: ரோஹன் விகாஷ், சாரா பானர்ஜி*

# 10. இது மன்னர்களுக்கான காலமல்ல

**நேர்காணல்: ஐரோப்பிய யூனியனின் பாதுகாப்புத்துறை தலைவர் ஃபெடரிகா மொஹெறினி**



**அண்மையில் நீங்கள் உலகமே குழப்பத்தில் சிக்கியுள்ளது என்று கூறினீர்கள். அதற்கு என்ன அர்த்தம்?**

அமெரிக்கா உலகநாடுகளை கட்டுப்படுத்தும் போலீஸ் இல்லை என்பது அனைவருக்கும் தெரியும். நாம் அனைவரும் ஒரேதிசையில் நிற்க விரும்பவில்லை என்பது சரிதான். ஆனால் நாம் பன்முனைப்பட்ட நாடு என்று யார் குறிப்பிடுவார்கள்? ரஷ்யா, அமெரிக்கா, இந்தியா, சீனா உள்ளிட்ட நாடுகளா? அதிகாரம் கொண்ட உலகளாவிய விதிமுறைகளில் ஆதிக்கம் செலுத்தும் பிற நாடுகளா?

**உலகமே இன்று ஆதிக்கத்தினால் பல்வேறு பகுதிகளாக பிரிந்து வருகிறது என்பதை குறிப்பிடுகிறீர்களா?**

மக்களிடம் அதிகாரம் உள்ளது. அதிகாரம் என்பது இன்று ஒருவரின் கையில் ஏன் அரசின் கையில் கூட இல்லை. அது நிலப்பரப்பு சார்ந்து சமூகம், தனியார் நிறுவனங்களுக்கும் கூட மாறுகிறது. இது மன்னர்களுக்கான காலமல்ல.

**கடந்தாண்டு ஜூனில் மக்களின் வாக்கெடுப்பு அடிப்படையில் ஐரோப்பிய யூனியனை விட்டு இங்கிலாந்து வெளியேறும் முடிவெடுத்தது. இதிலிருந்து என்ன**

***விஷயங்களை நீங்கள் கற்றீர்கள்?***

*வாக்காளர்களின் முடிவு சரிதான். ஏனெனில் அவர்கள், ஏன் ஐரோப்பிய யூனியன் எங்கள் வாழ்வை முன்னேற்றவில்லை என்று கேள்விகளைக் கேட்டார்கள். ஐரோப்பிய யூனியனுக்கு எதிரான இயக்கமாக இதனை நான் நினைக்கவில்லை. அமைப்பின் விதிகளின் மீது விரக்தியுற்ற மக்களின் கோபம் அது.*

***அகதிகள் பிரச்னையை ஐரோப்பிய யூனியன் சரியான முறையில் எதிர்கொண்டுள்ளதா?***

*ஐரோப்பிய யூனியன் 9. 5 பில்லியன் டாலர்களை சிரியாவில் முதலீடு செய்துள்ளது. சிரிய மக்களுக்கான கல்வி, உணவு, இருப்பிடம் உள்ளிட்டவைகளுக்காக எந்த ஒரு நாடும் இதுபோல உதவி செய்யவில்லை. ஒருங்கிணைந்த செயல்பாடு, அகதிகளுக்கான மறுவாழ்வு என்பது இப்படியாகத்தானே இருக்கமுடியும்.*

***அகதிகளின் வருகை குறைப்பதற்கு ஐரோப்பிய யூனியன் எல்லைகளை மூடிவிடுமா?***

*எங்களது எல்லைகள் மூடப்படாது. நாங்கள் அச்சிக்கலை சரியான வகையில் எதிர்கொண்டு வருகிறோம். நாங்கள் சுவர்களை எழுப்ப வேண்டிய அவசியமில்லை ஏனெனில் அது ஐரோப்பிய யூனியனின் அணுகுமுறையுமல்ல. இங்கிலாந்து அமெரிக்காவுடன் தனியாக ஒப்பந்தங்களை பேச விரும்புகிறது. இது ஐரோப்பிய யூனியனுக்கு சிக்கலை ஏற்படுத்துமா? ஐரோப்பிய யூனியனில் உறுப்பினராக இருந்த இங்கிலாந்து அடுத்த இரண்டு ஆண்டுகளுக்கும் அதில் நீடித்திருக்கும் நிலையில் பிற நாடுகளோடு வணிகரீதியான ஒப்பந்தங்களை செய்ய முடியாது.*

***அமெரிக்க அதிபர் ட்ரம்பின் பிரெக்ஸிட்டிற்கு ஆதரவான ட்வீட்களைப்பற்றி...***

*ட்வீட் என்பது வணிக ஒப்பந்தம் ஆகாது.*

*நன்றி: சைமன் சஸ்டர், டைம்*

# 11. இந்தியாவில் செயல்படுத்தப்பட்ட பணமதிப்புநீக்க நடவடிக்கை வெற்றி பெறவில்லை

***நேர்காணல்: ரகுராம்ராஜன், முன்னாள் ரிசர்வ் வங்கி ஆளுநர்***



*இந்தியாவின் 23 ஆவது ரிசர்வ் வங்கி ஆளுநராக(2013-16) பணியாற்றியரகுராம்ராஜன், தற்போது சிகாகோ பிஸினஸ் பள்ளியின் நிதித்துறை பேராசிரியர். IMF இன் முன்னாள் பொருளாதார தலைவரான ரகுராம் ராஜன், I Do What I Do: On Reforms,Rhetoric and Resolve என்ற நூலை எழுதி வெளியிட்டுள்ளார்.*

***இந்தியாவின் பொருளாதார வளர்ச்சியை எப்படி பார்க்கிறீர்கள்?***

*நம்பிக்கை அளிக்கிறது. ஜிஎஸ்டி சீரமைப்பை அரசியல் தடைகளை தாண்டி அமல்படுத்தியதால் வரி ஏய்ப்பு குறைந்து நாட்டினை ஒரே சந்தையாக அமைப்பது பெரிய விஷயம். ரியல் எஸ்டேட் மசோதா, ஜிஎஸ்டி, தொழில் முதலீடு ஆகியவற்றில்கவனம் செலுத்தினால் வேலைவாய்ப்பு, தனியார் முதலீடு ஆகியவை அ ஆனால் இவை சரிவர நிகழவில்லை. வங்கிகளின் பிரச்னைகளை விரைவில்தீர்த்தால் மட்டுமே ம இந்தியாவின் பிரச்னையே, அடுத்தஎன்ன செய்வது என்று தெரியாததுதான். சீரமைப்பு செயல்பாடுகள் நடைபெறுவதுஇந்த வரிசையில்தான்.*

***ரிசர்வ் வங்கியிடம் பணமதிப்பு நீக்க நடவடிக்கையால் 99% நிதி சேர்ந்துள்ளதுஎன்கிறது அரசு. பணமதிப்பு நீக்கம் பற்றிய நூலில் நீங்கள் என்ன கருத்தை கூறியுள்ளீர்கள்?***

*பணமதிப்பு நீக்கத்தை அமல்படுத்தும்முன் நாம் கேட்டுக்கொள்ள வேண்டியகேள்விகள் உ*

*பணமதிப்பு நீக்கத்தினால் ஏற்படும் செலவு. ஜிடிபியால் 2%பாதிப்பினால் 2. 5 லட்சம் கோடி பாதிப்பு ஏற்படும். இதோடு மக்களின் சிரமங்கள். அடுத்து ஆர்பிஐ பணத்தை அச்சடிப்பது விநியோகிப்பது என 8 ஆயிரம் கோடி செலவு செய்துள்ளது. 99% பணம் பெறப்பட்டுள்ளது என்றாலும் அதில்கருப்புபணம் அடையாளம் காணப்பட்டால் மட்( தடுமாறிய கஷ்டத்திற்கு பலன் கிடைக்கும். எலக்ட்ரானிக் பரிமாற்றம் என்பது இம்முறையில் அதிகரிக்கும் வாய்ப்புள்ளது. வரி முதலீடு 10 ஆயிரம் கோடி என்றாலும், கருப்பு பண போது பணமதிப்பு நீக்க நடவடிக்கையை காலம் மட்டுமே வெற்றியா, தோல்வியா எனகூற முடியும்.*

***பணமதிப்புநீக்க நடவடிக்கை கிராமத்தை கடுமையாக பாதித்துள்ளதற்கு காரணம், அது வேகமாக அமல்படுத்தப்பட்டதுதான் என்கிறீர்களா?***

*நாட்டில் 87% சர்க்குலேசன் ஆகும் பணத்தை திடீரென கையகப்படுத்தினால் என்னாகும்? விளைவு மக்கள் தெருவில் பரிதாபமாக செல்லாக்காசோடு அலைபாய்ந்தனர். ஜிடிபி குறித்த ஆய்வை செய்து பணமதிப்பை அமல்படுத்தியிருக்கலாம். பணமதிப்பு திட்டங்கள் அனைத்தும் வெற்றியடையவாய்ப்பில்லை. முதலில் பணத்தை அச்சிட்டு, பணமதிப்பு நீக்கத்தை செய்திருந்தால்மக்களுக்கு நேர்ந்த பாதிப்பை (*

***அப்படியானால் ஆர்பிஐக்கு பணமதிப்பு நீக்கம் பற்றிய ஐடியாவே இல்லை என்கிறீர்களா?***

*செப். 2016 அன்று ஆர்பிஐ ஆளுநர் பதவியிலிருந்து விலகும்வரை பணமதிப்பு நீக்கம் பற்றிய எந்த கருத்துக்களும் எங்கள் உறுப்பினர்களிடையே விவாதிக்கப்படவில்லை.*

***காங்கிரஸ், பிஜேபி என இரு அரசுகளிடையே கவர்னராக பணியாற்றியுள்ளீர்கள். எந்த அரசு உறுதியான முடிவுகளை எடுக்கும் அரசாககருதுகிறீர்கள்?***

*அரசுகளைப்பற்றி பேசுவது அவர்கள் என்மீது கொண்டிருந்த நம்பிக்கைக்குசெய்யும் துரோகப இரு அரசுகளிடமே எனக்கு நல்லுறவு இருந்தது.*

***வட்டிவீதத்தை குறைவாக வைத்திருப்பது பற்றிய தீவிரத்தை உங்களுடைய பதவிக் காலத்தில் கொண்டிருந்தீர்கள். தற்போதும் அது தொடர்கிறதே?*** *ஒவ்வொரு நாட்டிற்கும் இந்த டென்ஷன் உண்டு. ஆர்பிஐ நிதியமைச்சகத்தோடு*

*இணைந்து வட்டி சதவிகிதத்தை முடிவு செய்வது வாடிக்கை.*

***நிதி ஆயோக் துணைத்தலைவர் அரவிந்த் பனகரியா தன் பதவியிலிருந்து வெளியேறியுள்ள நிலையில், இந்தியாவைச் சேர்ந்தவர்களை முக்கிய பதவிக்கு நியமிக்கவேண்டும் என குரல் எழுந்துள்ளதே?***

*நாட்டில் இருப்பவர்களை நாட்டிற்கு வெளியே உள்ளவர்களுக்கு தேசபக்தி அதிகம். இல்லையெனில், ஏன் இந்தியாவுக்கு பணியாற்ற வரப்போகிறார்கள்?*

*நான் பணியின்போது எடுத்த பல்வேறு முடிவுகள் அதிகாரிகள் ஒவ்வொருவரின் கருத்துக்களை கேட்டறிந்து தீர்மானகரமாக எடுக்கப்பட்டவையே. உண்மையில்நான் பதவியிலிருந்து விலகும்போது, சிகாகோ கல்லூரி விடுமுறை நீட்டிக்காது என்ற நிலையில், அரசு என்னை பதவியில் நீட்டிக்க விரும்பாது என்ற எண்ணத்தை நான் எட்டியிருந்தேன் என்பதே உண்மை*

*நன்றி: சித்தார்த்தா, சுரோஜித் குப்தா, தி டைம்ஸ் ஆஃப் இந்தியா.*

## 12. அமெரிக்காவால் பாரீஸ் ஒப்பந்தத்திற்கு எந்த அச்சுறுத்தலும்கிடையாது

***நேர்காணல்: ப்ரூனே போய்ர்சன், சுற்றுச்சூழல் அமைச்சர், ப்ரான்ஸ்***



*ப்ரான்ஸ் அதிபர் இம்மானுவேல் மாக்ரோன் டிசம்பரில் இந்தியாவுக்கு சுற்றுப்பயணம் வரவிருக்கிறார். அதற்கான தயாரிப்பில் பரபரப்பாக உள்ள சுற்றுச்சூழல் அமைச்சர் ப்ரூனே போய்ர்சன் அமெரிக்கா சுற்றுச்சூழல் ஒப்பந்தத்திலிருந்து விலகியது அணுவளவும் சூழலியல் ஒப்பந்தத்தை பாதிக்காது என உற்சாகம் பிளஸ் தைரியமாக பேசுகிறார். பாரீஸ் ஒப்பந்தம் குறித்து அவரிடம் விரிவாக பேசினோம்.*

***அமெரிக்கா சூழல் ஒப்பந்தத்திலிருந்து திடீரென விலகிவிட்டது. இது உலகநாடுகளிடையே எதிர்காலத்தில் என்னவிதமான சவால்களை உருவாக்கும் என நினைக்கிறீர்கள்?***

*அமெரிக்காவின் அதிரடி முடிவால் பாதிப்பை எதிர்கொள்ள போவது, ஏழை நாடுகளும், சிறிய தீவு நாடுகளும்தான். சூழல் மாறுபாட்டுக்கு எதிரான போர் இன்றும் தொடர்கிறது. அமெரிக்கா சூழல் ஒப்பந்திலிருந்து விலகினாலும், அந்நாட்டின் நிறுவனங்கள், மாநில மேயர்கள், ஆளுநர்கள் அனைவரும் கூறுவது, நாங்கள் பாரீஸ் ஒப்பந்தத்தில் உள்ளோம் என்றுதான் கூறியுள்ளனர்.*

***உலகில் அதிகளவில் கார்பனை வெளியிடும் நாடு அமெரிக்கா. அந்நாடே ஒப்பந்தத்திலிருந்து விலகியிருப்பது என்ன மாதிரியான விளைவுகளை மூன்று ஆண்டுகளில் ஏற்படுத்தக்கூடும்?***

அமெரிக்காவின் முடிவினால் பாரீஸ் ஒப்பந்தத்திற்கு அணுவளவு அச்சுறுத்தலும் கிடையாது என்பதே உண்மை. இந்த ஒப்பந்தம் இன்றைய உலகிற்கு தவிர்க்கமுடியாததும், மாற்ற முடியாததுமான ஒன்று என இதற்கு ஒப்புதல் தெரிவித்த இந்தியபிரதமர் மோடிக்கு நன்றிகள். மேலும் உலகளவில் பாரீஸ் ஒப்பந்தத்தின் மூலமே தொழில்வளர்ச்சி, வேலைவாய்ப்புகள், சூழல் மேம்பாடு,வாழ்க்கைத்தரம் உயர்வு, வறுமை ஒழிப்பு அனைத்தும் சாத்தியம் என்பதை உலகிலுள்ள பல்வேறு துறையினரும் உணர்ந்துதான் இதற்கு ஆதரவளித்துள்ளனர்.

***சூழல் ஒப்பந்தத்தில் ப்ரான்ஸ் மற்றும் ஐரோப்பா என்ன மாதிரியான நடவடிக்கைகளை எடுக்கவிருக்கிறது?***

பாரீஸ் ஒப்பந்தப்படி, ப்ரான்ஸ் கடந்த ஜூலையில் பல்வேறு சூழல் திட்டங்களை உருவாக்கியுள்ளது. 2050 ஆம் ஆண்டுக்குள் கார்பனை குறைக்க பல்வேறு முயற்சிகளை எடுக்க திட்டமிட்டுள்ளோம். இம்மாதம் கரிம எரிபொருட்களின் பயன்பாட்டை தடை செய்யும் முக்கிய மசோதா நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்படவிருக்கிறது.

***பாரீஸ் ஒப்பந்தத்திலிருந்து அமெரிக்கா விலகியதை மறுபரிசீலனை செய்யும் முடிவிருக்கிறதா?***

ஜி7,ஜி20 ஆகிய பல்வேறு நாட்டு தலைவர்களும் பங்கேற்றும் பேசும் அமர்வு போன்றதல்ல பாரீஸ் ஒப்பந்தம். உலகம் முழுக்க சூழலைக் காக்கும்படியான நடவடிக்கை இது. உலகநாடுகளின் ஆலோசனைகளைப் பெற்று இதற்கான விதிகள் உருவாக்கப்படுகின்றன. சூழல் பிரச்னைகளை குறைப்பதற்காக தீவிரமாக வேலை செய்வது மட்டுமே இதற்கான மாற்று. இது நாட்டின் பொருளாதாரத்தை காப்பாற்றுவதோடு, மக்களின் வாழ்வையும் காப்பாற்றும். ஃபிஜி தீவில் நவம்பர் மாதம் நடைபெறவிருக்கும் COP23 மாநாடு பற்றிக்கூறுங்கள். இம்மாநாடு பாரீஸ் ஒப்பந்தத்தை மேலும் விரிவாக்கும் விதமாக இருக்கும். டிசம்பர்12 பாரீஸ் ஒப்பந்தத்திற்கு இரண்டு வயதாகிறது என்பதையொட்டி, டிசம்பர் 12சூழல் நிகழ்வை ப்ரான்ஸ் ஏற்று நடத்தும் என அதிபர் இம்மானுவேல் மேக்ரான் அறிவித்துள்ளார். அரசு மற்றும் தனியார் நிறுவனங்களின் பங்களிப்புடன் நடைபெறும் நிகழ்விது.

# 13. இந்திய அரசு மெல்ல உணர்ச்சியற்ற அரசாக மாறிக்கொண்டிருக்கிறது

***நேர்காணல்: மேதா பட்கர், நர்மதா பச்சோ அந்தோலன்***



*கடந்த 30 ஆண்டுகளுக்கு மேலாக நர்மா அணையில் கட்டப்படும் சர்தார் சரோவர் அணையினால் பாதிக்கப்படும் மக்களுக்கான இழப்பீடு, மறுகுடியமர்வுக்காக போராடி வரும் புரட்சிப் பெண்மணி மேதாபட்கர். புனேவில் அமைக்கப்படும் தனியார் கட்டுமானத்திற்கு எதிராக இடையறாது போராடிவருகிறார்.*

***கிராமங்கள் பாதிக்கப்படும் என போராடத்தொடங்கியுள்ளீர்கள். ஆனால் உங்களது போராட்டம் இத்தனை ஆண்டுகளாக சிறியளவிலேயே உள்ளதா நினைக்கிறீர்களா?***

*அதுதான் நம் பிரச்னை. நர்மதா அணை பிரச்னை உலகிலுள்ள பல்வேறு சூழல் அமைப்புகளின் கவனத்தையும் இதயத்தையும் தொட்டது உண்மை. வளர்ச்சி என்ற பெயரால் மக்களுக்கு இங்கு நடக்கிறது என்பதை உலகுக்கு சொல்லுகிறேன். மூன்றாம் தலைமுறையாக நடைபெறும் போராட்டம் இது. தந்தை, மகன் என தொடர்கிறது. உலகமயமாக்கத்தின் விளைவு இது. சூழல் பாதிப்பு குறித்த ஆய்வுகளை இவர்கள் முறையாக செய்யவில்லை. நாங்கள் இவற்றை எதையும் விடப்போவதில்லை. இன்றைய அரசு, போராட்டத்தினரின் சொற்களை காதுகொடுத்து கேட்கவே மறுக்கிறது. தினசரி நாங்கள் சவால்களை எதிர்ப்புகளை*

*கண்டு வருகிறோம். உடல் தளர்ந்தாலும் மனம் இன்னும் தளரவில்லை.*

***தேசிய மக்களியக்க கூட்டணி(NAPM)யை உருவாக்கினீர்களே அது பற்றிக்கூறுங்கள்.***

*மக்கள் பிரச்சினைக்காக தேசியளவில் கூட்டணியை உருவாக்குவது சிரமம். குறிப்பிட்ட ஜாதி என்றால் குழு ஓரணியாய் மக்களை திரட்டிவிட முடியும். தற்போது ஆட்சிசெய்யும் பிஜேபியின் அதிகாரத்தை சமாளிப்பது எளிதல்ல. அமைப்பு உங்களுக்கு ஏற்படுத்தும் காயங்கள் வெளியில் தெரியாது. ஆனால் உள்ளே காயமாகி இருக்கும். தொழிலாளர்கள்,கல்வி, மின்சாரம், அடிப்படை கட்டமைப்பு என பல்வேறு பிரச்னைகளுக்கு குரல் கொடுத்துள்ளோம். பல்வேறு அரசியல் நலன்கள் சார்ந்ததாக வளர்ச்சி என்ற சொல் உச்சரிக்கப்படுகிறது. இயற்கை வளங்கள் லாபவெறி நிறுவனங்களுக்கு தாரை வார்க்கப்படுகிறது. எங்களை முதலாளிகளின் ஊடகமும் கண்டுகொள்வதில்லை. இன்றும் என்னை தேர்தலில் போட்டியிடச்சொல்லி மக்கள் வற்புறுத்துகிறார்கள். அதைச் செய்ய நான் என்ன முட்டாளா?*

***ஆம் ஆத்மி கட்சி சார்பாக போட்டியிட்டீர்கள். ஆனால் அம்முடிவை தவறு என நினைக்கிறீர்களா?***

*மக்கள் இயக்கத்தை சரியாக கட்டமைக்காமல் தேர்தலில் போட்டியிடக்கூடாது என்று தெரிந்துகொண்டேன். தேர்தலில் வெற்றிபெற்றால் உடனே நம் கேள்விகளுக்கு பதில் கிடைத்துவிடாது. இறுதியில் ஏமாறுவது நாம்தான். ஜெயித்தோம் என்ற உணர்வு சில நாட்கள் மனதுக்குள் இருக்கும். மக்களுக்கான இயக்கத்தின் மூலம் உருவாக்கும் தாக்கம் தலைமுறைகளை தாண்டி செல்லும்.*

***உங்களது வெற்றியை எப்படி பார்க்கிறீர்கள்?***

*புனேவின் கட்டிட நிறுவனத்தை லவசாவிலும், அரசியல்வாதி சாஹன் புஜ்பாலின் சர்க்கை ஃபேக்டரியை மூடியதை முக்கியமானதாக நினைக்கிறேன். நிறையப்பேர் பணம், பயன்கள் என கணக்கிடுகின்றனர். பலாபலன்களை தாண்டியது எங்களது செயல்பாடுகள். இன்று அரசுகள் கோர்ட் தீர்ப்புகளை பெரிதாக மதிப்பதில்லை. சிப்கோ இயக்கம் போல மரத்தை கட்டிப்பிடித்தால் இன்று அதனை*

காப்பாற்ற முடியாது. அரசு இன்று உணர்ச்சியற்றதாக மாறிவருவதோடு மக்களோடு உரையாடவும் மறுக்கிறது.

***எதிர்கால திட்டம் என்ன? உங்களை தொடர்ந்து இயங்கச்செய்வது எது?***

மக்களின் வீட்டை அழித்துவிட்டு தகரக்கொட்டாயை போட்டுக்கொடுத்து வன்முறையை நிகழ்த்திவிட்டு வளர்ச்சி என்று அரசு கூறுகிறது. பன்னாட்டு நிறுவனங்களின் பின்னே அரசியல்வாதிகளும் மாஃபியாவும் உள்ளனர். எங்களிடமுள்ள தன்னார்வலர்கள் அனைவரும் 30வயதுக்குட்பட்டவர்கள்தான். நுகர்வு கலாசாரத்தின் விளைவாக அநீதியை எதிர்த்துக் கேட்கும் துணிச்சலை நடுத்தர வர்க்கம் இழந்துவிட்டது. மினரல் வாட்டர் வாங்கி குடித்துவிட்டு நிலத்தடி நீர் இழப்பு பற்றி எப்படி போராடுவீர்கள்? இளைஞர்கள் மட்டுமே அநீதியை எதிர்த்து போராடுவதற்கான நம்பிக்கையை தருகிறார்கள். இயக்கம் முன்னே நகருகிறது.

நன்றி: Prachi Pinglay-Plumber, Outlook

# 14. உண்மையை உலகிற்கு சொல்வதே பத்திரிகையாளரின் வேலை

***நேர்காணல்: மைக்கேல் ரெசண்டெஸ்***



*போஸ்டன் க்ளோப் பத்திரிகையில் புலனாய்வு செய்தியாளராக 20ஆண்டுகள் பணிபுரிந்த புலிட்ஸர் பரிசு வென்றுள்ள மைக்கேல், பத்திரிகையாளர், ஆசிரியர் என பல்வேறு பதவிகளை திறம்பட வகித்துள்ளார். 2003 ஆம் ஆண்டு கத்தோலிக்க சர்ச்சில் நடந்த பாலியல் விவகாரங்களை எழுதியது மைக்கேலின் பெயரை இதழியல் உலகம் தாண்டி பலரது மனதிலும் கவனப்படுத்தியது. பின்னர் வெளியான ஸ்பாட்லைட் படமும் இவரது கட்டுரையைப் பற்றியதேயாகும். அண்மையில் இந்தியாவிற்கு செய்தி மாநாட்டில் கலந்துகொண்ட மைக்கேல் ரெசண்டெஸிடம் பேசினோம்.*

***அமெரிக்க பத்திரிகைத்துறையில் கடந்த 10 ஆண்டுகளில் நடந்த முக்கிய மாற்றமாக நீங்கள் எதைக் கூறுவீர்கள்?***

*மிக சிக்கலான காலகட்டம் இது. அமெரிக்காவிலுள்ள பல்வேறு பாரம்பரிய செய்தி நிறுவனங்களும் கூட நிதி நெருக்கடியிலிருந்து தப்பிக்க முடியவில்லை. நாளிதழ்களின் வருமான வழிகள் அனைத்தும் இணையத்தில் பாதாளத்தில் விழுந்துவிட்டன என்பதுதான் இன்றைய நிலை. பல்வேறு நிறுவனங்களும் தங்களது பணியாளர்களை வேலையை விட்டு நீக்குகின்றன, சம்பளத்தை*

வெட்டுகின்றன என அமெரிக்கா முழுவதும் இதுதான் நிலைமை.

***நிதி நிலைமை பாதிப்பை சீர்செய்வது எப்படி?***

செய்தி வெளியிடுவதற்கான புதிய மாடல்களை யோசிக்கவேண்டிய நேரமிது. வணிக நோக்கமற்ற மாடல்கள் மேல் எனக்கு ஆர்வம் திரும்பியுள்ளது. அமெரிக்காவில் இதுபோன்ற நன்கொடை பெற்று சில அமைப்புகள் செயல்பட்டு வருகின்றன எ. கா: Pro Publica, centre for integrity, Centre for Investigative Reporting ஆகியவை சிறப்பாக செயல்படுவதோடு செய்திகளும் நன்றாக இருக்கின்றன. ஆனால் இது சரியானதல்ல. பல்வேறு செய்தி நிறுவனங்களும் நிதியில்லாததால் செய்திகளை சேகரித்து வெளியிடமுடியாமல் தவித்து வருகின்றன. இது ஜனநாயகத்திற்கு ஏற்பட்ட தடுமாற்றம். இதற்கான தீர்வு விரைவில் கிடைக்கும் என நம்புகிறேன்.

***போஸ்டன் க்ளோப் பத்திரிகையில் இன்றும் 5000 வார்த்தைகளில் எழுதப்பட்ட உங்களது கட்டுரையைப்போல பரபரப்பாக வாசிக்கப்பட்டது வேறு எதுவுமில்லை. அது பற்றி கூறுங்கள்.***

நான் எழுதிய ஸ்பாட்லைட் கட்டுரைகளை மக்கள் வரவேற்றது எனக்கும் ஆச்சர்யம்தான். அதேசமயத்தில் சுவாரசியமாக, வசீகரமான வடிவில், அமர்க்களமாக எழுதப்பட்ட கட்டுரைகளையும் மக்கள் வாசித்தார்கள் என்பதே உண்மை. மக்கள் படிக்க வேண்டும் என்பதற்காக உழைத்து எழுதிய கட்டுரைகளை நேரம் ஒதுக்கி அவர்கள் வாசித்தது எனக்கு மகிழ்ச்சிதான்.

***நீங்கள் உங்களது இணையதளத்தில் வாசித்த கட்டுரை எது?***

முன்னாள் ராணுவ வீரர்களுக்கு மருத்துவமனைகளில் அளிக்கப்படும் தரமற்ற அலட்சிய சிகிச்சைகள் பற்றி ஸ்பாட்லைட் கட்டுரைகளை படித்தேன். அங்கு சிகிச்சை பெறும் பலரும் முதுகெலும்பு அடிபட்டதால் பாதி உடல் செயலிழந்து படுக்கையில் கிடப்பவர்கள். அவர்கள் பற்றிய கட்டுரை இணையத்தில் ஏற்றிய சில மணி நேரங்களிலேயே மருத்துவமனைக்கு பொறுப்பான இரண்டு அதிகாரிகள் பணியிலிருந்து தூக்கியெறியப்பட்டனர். மற்றகட்டுரைகளை முழுக்க நான் படிக்கவில்லை. ஆனால் மக்கள் அதிகம் படித்த கட்டுரை இதுதான் என உங்களிடம்

பெட் கூட கட்டுவேன்.

**அமெரிக்க அதிபராக ட்ரம்ப் உள்ள நிலையில் புலனாய்வு செய்திகளை சேகரிப்பது எப்படி அமையும் என நினைக்கிறீர்கள்?**

பத்திரிகைப்பணி என்பது இன்று பொருளாதார நசிவில் சிக்கியுள்ளது. அதிபர் ட்ரம்ப் மற்றும் அவரது குடும்பம் பிஸினஸ் செய்வதில் பேரார்வம் கொண்டவர்கள். சிக்கல்கள் இருந்தாலும் புலனாய்வு செய்திப்பணிக்கு இது பொற்காலம் என்பேன். இங்கு செய்யவேண்டிய ஏராளபணிகள் காத்துக்கிடக்கின்றன.

**உங்களை இம்ப்ரஸ் செய்த செய்திக்கட்டுரைகள் ஏதேனும் உள்ளதா?**

அசோசியேட் பிரஸ் நிறுவனத்தைச் சேர்ந்த பெண் பத்திரிகையாளர்கள் அடிமைகள் தயாரிக்கும் கடல் உணவுகள் பற்றி எழுதிய கட்டுரையை வாசித்து பிரம்மித்து போனேன். வடகிழக்கு ஆசியா பகுதியைச் சேர்ந்த அடிமைத் தொழிலாளர்கள் தயாரிக்கும் கடல் உணவான மீன்,பல்லாயிரம் கி. மீ கடந்து அமெரிக்கர்களின் டேபிளை வந்தடையும் கதை அது. உண்மையிலேயே அற்புதமான கட்டுரை இது. கத்தோலிக்க சர்ச் குறித்த ஸ்பாட்லைட் கட்டுரை உங்களை தனித்துவமாக அடையாளம் காட்டியது அதிலிருந்து நீங்கள் கற்றுக்கொண்டது என்ன? அதிகாரத்தை தொடர்ந்து தளர்வுறாமல் கேள்வி கேட்பதைத்தான்.

**இந்தியாவிற்கு வந்திருக்கும் நோக்கம் என்ன?**

ஸ்பாட்லைட் கட்டுரைக்கான முக்கியபணியின் இறுதிகட்டத்தில் இருக்கிறேன். இந்தியப்பயணம் நான்கு நாட்கள்தான். அதை முடித்துவிட்டு உடனே போஸ்டன் செல்லவேண்டும். இந்த மாநாட்டில் சிறந்த நட்புணர்வு கொண்ட மனிதர்களை சந்தித்தேன். நேரமிருந்தால் தாஜ்மஹால் பார்க்க விரும்புகிறேன்.

நன்றி: *Vidhi Choudhary, Livemint*

## 15. இந்திராகாந்தியின் முடிவு புத்திசாலித்தனமானதுதான்

*__பிரணாப் முகர்ஜி, முன்னாள் குடியரசுத்தலைவர்*8*



*இந்திராகாந்தி காலத்திலிருந்து காங்கிரஸ் அமைச்சரவையில் பதவி வகித்து பின்னர்,குடியரசுத்தலைவராகி ஓய்வு பெற்றுவிட்டாலும் நாளிதழ்களில் பேசப்படும் தலைவர்களின் ஒருவர் பிரணாப் முகர்ஜி. 'Coalition Years' என்று அண்மையில் எழுதியுள்ள நூலில் காங்கிரஸ் ஆட்சியின் அனுபவங்களை எழுதியுள்ளார் பிரனாப். பதவிக்கால அனுபவங்களைப் பற்றி அவரிடம் உரையாடினோம்.*

***நீண்டகால அரசியல் அனுபவங்களை கொண்டவர் நீங்கள். அதில் முக்கிய நிகழ்வாக எதனைக் குறிப்பிடுவீர்கள்?***

*1971 ஆம் ஆண்டு நான் பொதுவாழ்வுக்கு வந்த சமயத்தில், வங்காளதேசம் 13கோடி மக்களுடன் புதிதாக உருவானது. அன்றைய பிரதமரான இந்திராகாந்தி, "புதிய தேசமான வங்காளதேசத்தின் தலைநகரமாக டாக்கா செயல்படும். பாகிஸ்தான் ராணுவத்தினர் இந்தியாவிடம் சரண்டைந்துள்ளனர் என்பதை மகிழ்ச்சியோடு உங்களுடன் பகிர்ந்துகொள்கிறேன்" என்று இந்திராகாந்தி பேசிய தருணத்தை மறக்கவே முடியாது.*

***1971 ஆம் ஆண்டு இந்தியா வெற்றிபெற்றபிறகு, காஷ்மீர் பிரச்னையில் இந்தியாவின் எடுத்த முடிவு திருப்தியான ஒன்றுதானா?***

இந்திராகாந்தி தன்னிச்சையாக போர்நிறுத்த முடிவை எடுத்தது புத்திசாலித்தனமானது. அப்படி எடுக்காவிட்டால் நிலைமை விபரீதமாகி இருக்கும். மேலும் பாகிஸ்தான், இந்தியா இருநாட்டின் போர் நீள்வதை ரஷ்யாவும்,அமெரிக்காவும் விரும்பவில்லை.

***நீங்கள் பிரதமராவதை தடுத்த அரசியல் காரணங்கள் என்ன?***

நான் பிறந்து வளர்ந்த மாநிலத்தை 34 ஆண்டுகளாக இடதுசாரி அரசு ஆண்டது. இந்தியாவின் பிரதமராக தேர்ந்தெடுப்பவரின் கட்சி, அவரது மாநிலத்தை கூட ஆளவில்லை என்றால் எப்படி? மன்மோகன்சிங் பிரதமராக தேர்ந்தெடுக்கப்பட்டபோது, காங்கிரஸ் அரசு பஞ்சாப்பில் ஆட்சியில் இருந்தது.

***2012 ஆம் ஆண்டு நிதி மசோதாவை ஒன்றை அறிமுகப்படுத்தியபோது, வோடஃபோன் நிறுவன அதிகாரிகள் உங்களை சந்தித்து, சட்டத்தை மாற்றக்கோரியதாக நூலில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அதுபற்றிக் கூறுங்கள்.***

நிதி மசோதா தயாரிப்பின்போது பல்துறையைச் சார்ந்தவர்களை சந்திப்பது இயல்பானதுதான். அவர்களின் கோரிக்கையை சட்டத்திற்குட்பட்டு நிதியமைச்சர் சேர்க்க விரும்பினால் சேர்க்கலாம். நான் செயல்பட்டது இம்முறையில்தான்.

***நீங்கள் நிதியமைச்சராக செயல்பட்ட காலத்தில்தான் பணவீக்கத்தைக் குறைக்க நிதி ஊக்க செயல்பாடுகளை தொடங்கினீர்கள். பொருளாதாரத்தை அது தேக்கமாக்கும் என்று நீங்கள் யோசிக்கவில்லையா?***

2008 ஆம் ஆண்டு உலகமெங்கும் பொருளாதார சிக்கல் பரவத்தொடங்கியது. அது தற்காலிகம் என்று முடிவு செய்து இடைக்கால பட்ஜெட்டை தயாரித்தோம். அப்போது எங்களை சந்தித்த தொழிலதிபர்கள் பலரும் விதிகளில் மாற்றம் தேவை என்றனர். அப்போது என்னிடம் மன்மோகன், சிதம்பரம் ஆகியோர் தயாரித்த நிதி ஊக்க மசோதா தயாராகி இருந்தது. நிதி ஊக்க மசோதாவை பல்வேறு ஆய்வு,தயார்ப்படுத்தலுக்கு பின்னேதான் அறிவித்தோம். தற்போதைய சூழலை முழுக்க நான் அறியாததால் இதுபற்றி கருத்து கூற முடியாது.

***கருணைமனுக்கள் மீது முடிவெடுக்க என்ன விஷயங்களை கணக்கில்***

**எடுத்துக்கொண்டீர்கள்?**

*நான் தனிப்பட்டரீதியில் மரணதண்டனைக்கு எதிரானவன். ஆனால் இந்திய அரசின் சட்டப்படி சாட்சிகள், ஆதாரங்களை முன்வைத்து குற்றவாளி ஒருவருக்கு உயர்நீதிமன்ற, உச்சநீதிமன்ற நீதிபதிகள் பரிந்துரைத்துள்ள தீர்ப்பை நான் ஏன் மாற்றவேண்டும்? அப்படி எதிர்பார்ப்பது சரியான தன்மையல்ல.*

*நன்றி: TOI Team(Diwakar,Rajeev,subodh,sidhartha,surojit)*

## 16. அறிவியலில் சாதித்தாலும் பெண்களுக்கான அங்கீகாரம் இங்கு குறைவு

**பேராசிரியர் சாரா கெம்ப்ளர்.**




*2016 ஆம் ஆண்டில் அறிவியல் துறையில் பணியாற்றி பெண்களின் எண்ணிக்கை 13 ஆயிரம். ஆனால் ஒட்டுமொத்தமாக பெண்களின் பங்களிப்பு என்பது 21% சரிந்துள்ளது. அறிவியல் தொழில்நுட்ப வேலைகளை பெண்கள் தவிர்ப்பதன் காரணங்கள், பெண்கள் மீதான தீண்டாமை பற்றி கோல்ட்ஸ்மித் பல்கலைக்கழக பேராசிரியரான சாரா கெம்ப்ளரிடம் பேசினோம்.*

***அறிவியல் துறைகளில் பெண்களை ஈடுபடவைக்க நாம் சிறப்பாக செயல்பட்டுள்ளோமா?***

*நிச்சயமாக. ஆனால் இதற்கான நமது முயற்சிகள் போதுமானதா என்று எனக்கு தெரியவில்லை. திரைப்படங்களில் எழுதுவதில் 15%,இயக்குவதில் 5% மட்டுமே பெண்களின் பங்குள்ளது. மேலும் கூகுள் போன்ற நிறுவனங்களிலேயே பெண்களுக்கு பெரிய முக்கியத்துவமில்லை. ஆண்களும், பெண்களும் திறமை அடிப்படையில் ஒன்றாக இருந்தாலும் அறிவியல் பணிகளில் பெண்களை தவிர்ப்பது சமூகத்தின் கட்டமைப்பிலேயே உறைந்துள்ளது.*

***பெண்களை புறக்கணிக்கும் சூழ்நிலைகளை எதிர்த்து என்ன முறைகளில் நாம் போராடவேண்டும்?***

*தகவல் தொழில்நுட்பம் மட்டுமல்ல, கலை, சமூக அறிவியல் என பலதுறைகளையும் பார்க்க வேண்டியுள்ளது. அவற்றை பார்க்காதபோது,பிரச்னையின் தீவிரத்தை நாம் புரிந்துகொள்ளவே முடியாது. கணினித்துறையில் நடப்பது குறிப்பிட்ட அரசியலே. ஆண்களோடு பெண்களும் கணினிக்கல்வி கற்றுத்தானே மேல்படிப்பிற்கு வருகிறார்கள்? அப்புறம் ஏன் அவர்கள் புரோகிராமர் போன்ற பணிக்கு வரமுடிவதில்லை?*

***பாலினரீதியிலான சமச்சீரின்மையை அரசு, கல்வி இரண்டில் எது தீர்க்கும் என நம்புகிறீர்கள்?***

*இரண்டுமேதான். அரசின் அறிவியல் துறைகள் பற்றிய கொள்கை, அதன் லட்சியத்தை உறுதியாக எட்டவில்லை என்றே கூறமுடியும். பாலின அரசியல், பெண்ணியம் குறித்த நிறைய கேள்விகள் நம்மிடம் உள்ளன. பெண்கள் சமநிலை பற்றியெல்லாம் கல்வி நிலையங்களில் எக்கச்சக்கமாக பேசியாகிவிட்டது. ஐடி நிறுவனங்கள் எப்படி இதனை தீர்க்கும் என நம்புகிறீர்கள்? அதற்கு அணுவளவு வாய்ப்பும் இல்லை.*

***அறிவியல்துறைகளில் பெண்கள் ஈடுபட கலாசார வேறுபாடுகள் தடையாக உள்ளதா?***

*மிகப்பரந்தளவிலான பிரச்னை இது. இதனை சயின்டிசம் என கூறலாம். சமூகம், உயிரியல் ஆகியவையில் இதில் தொடர்புகொண்டுள்ளன. கூகுள் பொறியாளர் ஜேம்ஸ் டாமோர்க்கு கூகுள் நிறுவனத்தால் கொடுக்கப்பட்ட மெமோ இதனையே சுட்டிக்காட்டுகிறது. ஆண்கள். கணினியை இயக்குவதிலும், பெண்கள் தகவல்தொடர்பிலும் வல்லவர்கள் என்பதுதான் அதில் கூறப்பட்டிருந்தது. முகத்தை ஸ்கேன் செய்து ஆணா, பெண்ணா என கண்டறியும் அளவு கடந்து சமபால் ஈர்ப்பாளர்களையும் அறிவியல் வளர்ந்துவிட்டது. நான் இதை போலி அறிவியல் என்பேன். பெண்கள் அறிவியல் பல சாதனைகளையே செய்தாலும் அவர்களுக்கான அங்கீகாரம் மிக குறைவு.*

*தொகுப்பு: இஷா பனேசர், கா. சி. வின்சென்ட்*

## 17. கீதாபிரஸ் நூல்களின் அரசியல் மிக ஆழமானது

**நேர்காணல்:அக்ஷயா முகுல்**



இன்றைய நிலையில் அக்ஷயா முகுல் எழுதிய *Gita Press and the Making of Hindu India,* என்ற புத்தகத்தை வாசிக்க பெரும் தைரியம் வேண்டும். பல்வேறு ஆராய்ச்சிகள் செய்து எழுதப்பட்ட நூல், ராம்நாத் கோயங்கா விருது(2016) உட்பட ஏராள விருதுகளைப் பெற்றது. அவரின் புத்தகத்திலுள்ள பல்வேறு விஷயங்கள் மெல்ல நடக்கத்தொடங்கியுள்ள சூழலில் அவருடன் தொலைபேசியில் நாம் நடத்திய நேர்காணல் இது.

**கீதா பிரஸின் தொடக்கத்தை படிக்கும் இன்று நடக்கும் இந்து ராஷ்டிரா விஷயங்களுக்கும் தொடர்பிருப்பதாக நன்கு உணரமுடிகிறதே எப்படி?**

2010 ஆம் ஆண்டு எனது நூலுக்கான ஆராய்ச்சியைத் தொடங்கினேன். துல்லியமாக 2011 இன் முற்பகுதி. 1947 ஆம் ஆண்டிலிருந்து இந்து ராஷ்டிரத்தின் பல்வேறு விஷயங்களும் மாறவில்லை. இந்து மகாசபை,பிஜேபி, ஆர்எஸ்எஸ் கடந்து இதில் கீதா பிரஸ்ஸின் பங்கு முக்கியமானது. கீதா பிரஸ்ஸின் வெளியீடான கல்யாண் என்ற இதழ்,பலராலும் வாசிக்கப்பட்டு மனமாற்றம் ஏற்படுத்தியதோ, இல்லையோ பலரது வீடுகளையும் சென்றடையும் அவர்களது திட்டம் வெற்றி பெற்றது. பின் 1950-51 இல் உருவான இந்து சட்ட மசோதாவுக்குப் பின்,முஸ்லீம்கள் இந்து பெண்களை காதலிப்பது இந்துப்பெண்களின் சொத்துக்களை அபகரிப்பதற்குத்தான் என்ற பொய்யை

*திட்டமிட்டு பரப்பினார்கள்(ஆபரேஷன் ஜூலியட்). 2014 ஆம் ஆண்டு அது அப்படியே மீண்டும் ரிபீட்டானது(லவ் ஜிகாத்). 31% மக்கள்தான் பிஜேபிக்கு வாக்களித்திருக்கிறார்கள் என்பதை அவர்கள் இன்னும் புரிந்துகொள்ளவில்லை.*

***மகாபாரதம், ராமாயணம் ஆகிய நூல்களை மலிவான விலையில் வெளியிடும் சிறுநகரைச்சேர்ந்த ஒரு பதிப்பகம் என்றே கீதா பிரஸ்ஸை குறிப்பிடலாம். இதில் அவர்களை தவறு சொல்ல என்னவிருக்கிறது.***

*நீங்கள் நினைத்தது போல்தான் முதலில் நானும் நினைத்தேன். சில மார்வாரி இனத்தவர் ஒன்றிணைந்து 1923 ஆம் ஆண்டு உருவாக்கியதே கீதா பிரஸ். இந்துமத புராணங்கள் மலிவான விலையில் தரமான தாளில் அச்சிட்டு வழங்குகிறார்கள் என்பது முதலிலேயே ஆச்சர்யம் தந்தது. பின்னர்தான் அது அவர்களின் அரசியல் திட்டம் என்பதை உணர்ந்தேன். கல்யாண் என்ற அவர்களின் இதழில் அனைத்து அரசியல் குறித்த விமர்சனங்களும் உண்டு என்று கூறினால் பலருக்கும் அதன் தீவிரம் புரியாமல் அப்படியா? என்கிறார்கள். ஆர்எஸ்எஸ் நுழைய முடியாத இடத்திலெல்லாம் அதன் கொள்கைகளைக் கொண்ட எழுத்துக்களை மெல்ல உள்நுழைக்கிறார்கள்.*

***கீதா பிரஸ் நூலின் உருவாக்கம் குறித்து கூறுங்கள்.***

*நூலின் உருவாக்கிற்கு 5 ஆண்டுகளாயின. ஜனவரி 2014 ஆம் ஆண்டு எழுத்துப்பணிகள் முடிவுற்றன. 2லட்சத்து 20 ஆயிரம் வார்த்தைகள் 1 லட்சத்து 65 ஆயிரம் வார்த்தைகளாக எடிட்டர் ரிவிகா இஸ்ரேல் மூலம் வெட்டித்தள்ளப்பட்டன. கோரக்பூர், பனாரஸ், அலகாபாத், லக்னோ ஆகிய இடங்களிலுள்ள நூலகங்களில் அலைந்து திரிந்து பழைய நூல்களைத் தேடியது முக்கியமான அனுபவம்.*

***கீதா பிரஸ் நூலை தலித்துகளும் படிக்கிறார்கள் என்கிறீர்களே?***

*அது உண்மைதான். 1926 ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட கல்யாண் இதழ் ஆன்மிகத்தை பேசுபொருளாக கொண்டிருந்தால் அதன் திட்டம் மிகப்பெரியது. இஸ்லாம் ஒரே குரலில் தன் மக்களிடம் அணுகுவது போல் இந்துத்துவம் மக்களிடம் அணுகமுடியவில்லை. அரசியல் நிகழ்வுகளை உடனுக்குடன் விமர்சித்ததோடு*

ராமன் பெயரை 5 லட்சம் தடவை எழுதினால் நீங்கள் விரும்பியதை பெறலாம் என பிஸினஸ் டீலிங்போலத்தான் பேசியது. 1947 ஆம் ஆண்டிலிருந்தே பாகிஸ்தான் முஸ்லீம்களுக்கு என்றால், இந்தியாவிலுள்ள இந்துக்களுக்கு ஹிந்துஸ்தான் தேவை என கல்யாண் எழுத தொடங்கிவிட்டது.

**கல்யாண் இதழில் நேரு மட்டும்தான் எழுதவில்லை அல்லவா?**

ஆம். அவர் மட்டும்தான் எழுதவில்லை. 1950 ஆம் ஆண்டு கோரக்பூரில் ஏற்பட்ட வெள்ளத்தை பார்வையிட வந்த நேருவிற்கு பிரசாத் போடார் தன் காரை பயணிக்க கொடுத்தார். மேலும் கீதா பிரஸ் நூல்களையும் அன்பளிப்பாக அளித்தார். பலமுறை கீதா பிரஸ் நேருவை வற்புறுத்தியபோதும் நேரு அவர்களின் விருப்பத்திற்கு இணங்க மறுத்துவிட்டார். நேரு, இந்திராகாந்தி, ராஜீவ்காந்தி ஆகியோர் இறந்தபோது அவர்களின் பத்திரிகையில் அஞ்சலிக்குறிப்பு தவறாமல் எழுதப்பட்டதன் காரணம், காங்கிரஸில் கீதா பிரஸ் அனுதாபிகள் நிறைய பேர் இருந்ததுதான்.

**கீதா பிரஸ் மக்களின் மனதில் இடம்பிடித்த நேரம் இடதுசாரிகள் தோற்றதற்கு காரணம் என்ன?**

இந்தி பேசும் மாநிலங்களில் ஜாதி, மதம் பேசாமல் அரசியல் சாத்தியமேயில்லை. எனவே ஜாதி, மதம் உள்ளிட்டவற்றை மறுத்த இடதுசாரிகள் படுதோல்வியைச் சந்தித்தார்கள். இன்றுள்ள உலகில் ஜாதி இல்லையென்று எப்படி உங்களால் மறுக்கமுடியும்?

நன்றி: Nandini Krishnan, manjula narayan fountainink. in,Hindustan times

## 18. சமூகவலைதளங்களில் உண்மையை அறிவது சிரமம்

**டோனி ஹால், பிபிசி நிறுவன இயக்குநர்.**



*பிபிசி இயக்குநரான டோனி ஹால், 2013 ஆம் ஆண்டு பிபிசி நிறுவனத்தில் மீண்டும் பணியில் இணைந்துள்ளார். 1973 ஆம் ஆண்டில் நியூஸ் ட்ரெய்னியாக பணியில் இணைந்தவர், பிபிசி ஆன்லைன், பிபிசி பார்லிமெண்ட், பிபிசி ரேடியோ5 லைவ் ஆகியவற்றை தொடங்கிய சாதனையாளர்.*

***நியூயார்க் டைம்ஸ் இயக்குநர் அண்மையில் அச்சு ஊடகத்தின் எதிர்காலம் பத்தாண்டுகள் என்று கூறியிருக்கிறார். பிபிசிக்கு அச்சு ஊடகம் இல்லை. பத்திரிகைகள் இல்லாத உலகம் எப்படியிருக்கும்?***

*அச்சு ஊடகம் காணாமல் போகும் என்று நான் நம்பவில்லை. மக்கள் முதலில் ரேடியா, அடுத்து சினிமா சாகும் என்றார்கள். இன்று என்னாயிற்று? மார்க் தாம்சனின் கருத்தை எங்களுடைய பிஸினஸ் மாடலுக்கு பொருத்தமுடியாது. ஆனால் தரம் வெல்லும். அச்சு ஊடகம் சரிந்தால், நாம் வேறுவழியைத் தேர்ந்தெடுப்போம். மக்களிடம் நடத்திய சர்வேயில் பல்வேறு செய்தி தளங்களை செக் செய்து இறுதியாக பிபிசி வந்து உண்மையான தகவல்களை அறிகிறோம் என்றார்கள். தரமான செய்திசேவை வெல்லும், அதேசமயம் காலந்தோறும் சந்திக்கும் சவால்களை குறைத்து மதிப்பிட முடியாது.*

***உலக நாடுகளிலுள்ள அரசியல் தலைவர்கள், அதிகாரிகள் ஃபேஸ்புக், ட்விட்டர்,இன்ஸ்டாகிராம் ஆகியவற்றிலேயே மக்களை எந்த ஊடக***

***இடைமுகமின்றி சந்திக்கிறார்கள். இதனை எப்படி பார்க்கிறீர்கள்.***

*சமூக வலைதளம் நீங்கள் விரும்பும் செய்திகளை ஒத்த விஷயங்களை தன் அல்காரிதம் மூலம் தேர்வு செய்து அளிக்கிறது. சமூக வலைதளம் மக்களுக்கு அளிப்பதை தாண்டிய விஷயங்களை நாங்கள் கவனப்படுத்தி தேர்ந்தெடுத்து வெளியிடுகிறோம். சமூகவலைதளம் பல்வேறு செய்திகளை வெளியிடுகிறது என்றாலும் உண்மையை யார் கூறுகிறார் என்பதை அறிவது மிக கடினம். எ. கா. பிரெக்ஸிட் விவகாரத்தில் சமூகவலைதளத்தில் வெளியான கருத்துகள்.*

***இந்தியாவில் குறிப்பிட்ட இனக்குழு மீது வெறுப்பு பரப்பப்பட்டு வரும் சூழலில் ஊடகங்கள் எப்படி செயல்படவேண்டும் என்று நினைக்கிறீர்கள்?***

*பிபிசி எந்த பிரச்னையிலும் சார்புநிலை எடுப்பதில்லை. அதாவது பாரபட்சமற்ற பார்வை. நீங்கள் ஒரு பத்திரிகையாளராக பிளவுபட்ட உலகில் பணியாற்றும்போது கோபமுற்ற, நிராதரவாக உள்ள மக்களிடம் கோபப்படக்கூடாது. ஒரு பிரச்னையில் பல்வேறு கருத்துக்களை கொண்டவர்களை பிரதிபலிக்க முயற்சிக்கலாம். நாம் ஒவ்வொருவரும் நமக்கான பாதுகாப்பு எல்லைக்குள் இருக்கிறோம். அடுத்தவரின் கருத்தைக் கேட்க எல்லைகளைக் கடந்து வரவேண்டும். கடினமாக இருந்தாலும் நாம் செய்யவேண்டியது இதுவே.*

***ஃபேஸ்புக் தனது அல்காரிதம் மூலம் பார்வையாளர்களையும் செய்திகளின் உள்ளடக்கத்தையும் கட்டுப்படுத்துகிறது. இதை எப்படி புரிந்துகொள்கிறீர்கள்.***

*எங்கள் இயக்குநர் குழுவிலும் பயனர் டேட்டாவை சேகரிக்க தலைவர் ஒருவரை நியமித்துள்ளோம். ஃபேஸ்புக் உள்ளிட்ட அனைத்து நிறுவனங்களின் நோக்கமும் பயனர் குறித்த டேட்டாதான். பிபிசியின் எதிர்காலமும் அதைப்பொறுத்தே அமையும். இங்கிலாந்தில் பிபிசி பயனர்களைப் பற்றிய தகவல்கள் எங்களை சிறப்பாக தகவமைத்துக்கொள்ள உதவும்.*

***பிபிசியில் பெண் ஊழியர்கள் சம்பளக்குறைவு குறித்த புகார்களை எழுப்பினார்களே?***

*2020 ஆம் ஆண்டுக்குள் உயர்மட்ட குழுவிலும், டிவியிலும் பெண்கள்-ஆண்கள்*

விகிதம் சமமாக இருக்கும். கடந்த ஆண்டு எங்கள் தொகுப்பாளர்களுக்கு கொடுத்த சம்பள விவகாரத்தை குறிப்பிடுகிறீர்கள். அவர்களில் பலரும் ஆண்கள் என்பது உண்மை. பிபிசியில் 6 ஆயிரம் பணிகள் உள்ளன. அவர்களை நான் பெறும் சம்பளத்தோடு ஒப்பிடுவது எப்படி சரியானதாகும்? பாலின தீண்டாமை இன்றி பிபிசி செயல்படுவதே எனது விருப்பம்.

நன்றி: Seema Chishti, indianexpress. com தொகுப்பு: சக்ரவர்த்தி தபேஷ்குமார், தீப்தி புவேஷன்

## 19. உண்மையை பேசும் மக்கள் அரசிடம் கொடுக்கும் விலை அசாதாரணமானது

*பிர்ஜித் ஸ்வார்ஷ், மூத்த பத்திரிகையாளர்.*



*வட ஆப்பிரிக்காவிலுள்ள மேற்கு சகாரா மற்றும் செனகல் ஆகியவற்றுக்கு இடையிலுள்ள மாரிடானியா உலகிலேயே கடைசியாக(1981) அடிமை முறையை ஒழித்த நாடு. 2007 ஆம் ஆண்டு அதனை குற்றமென அறிவித்தது. அராபியர்கள், பெய்டர்கள், வடகிழக்கு பகுதியிலிருந்து இடம்பெயர்ந்து வந்த பெர்பர்கள், ஆப்பிரிக்க அடிமைகள் இங்கு வசிக்கின்றனர். ஆப்பிரிக்க மாரிடானிய மக்களுக்கு எதிராக அரசு கட்டவிழ்த்த வன்முறை உள்ளிட்ட பிரச்னைகளை மூத்த பத்திரிகையாளரான பிர்ஜித் ஸ்வார்ஷ் பேசுகிறார்.*

***மாரிடானியாவில் இன்னும் அடிமை முறை ஒழிக்கப்படவில்லையா?இதற்கு ஆதாரம் ஏதேனும் கிடைத்திருக்கிறதா?***

*அரசு தவிர்த்த பிற இயக்கங்கள் அடிமை முறைக்கு எதிராக செயல்பட்டு வருகின்றன. அரசின் பங்கு இதில் மிக சொற்பம். ஹராடைன் இன மக்கள் கடும் வறுமையில் வதங்குகிறார்கள். வசதியான குடும்பங்களின் ஆடு மற்றும் ஒட்டகங்களை மேய்ப்பதே இவர்களின் பணி. கிராமங்களில் இன்றும் இவர்களை ஏலங்களில் வாங்கி விற்கிறார்கள். அடிமைகளை விடுவிக்க உழைப்பவர்களின் அமைப்புகளுக்கு அரசு பதிவு கிடையாது. இதன் விளைவாக, அயல்நாட்டு*

*நிதி கிடைக்காது. பேரணி, மாநாடு என எதையும் நடத்த அனுமதி இல்லை. அரசின் டிவி,ரேடியோ எதையும் பயன்படுத்த முடியாது. வாட்ஸ் அப் போன்ற சேவைகளைத்தான் சார்ந்து செயல்படுகிறார்கள்.*

***மாரிடானியாவில் தீர்க்கப்படாத பிரச்னைகள் என்ன?***

*அடிமைமுறையை அடுத்து தீண்டாமை. பின் இதைத்தொடர்ந்த குற்றச்செயல்கள். மனித உரிமை கண்காணிப்பகம் 1989-91 ஆண்டுகளில் அரசு ஆப்பிரிக்க மாரிடானியர்களுக்கு எதிராக தொடங்கிய திட்டத்தால் அதிகாரிகள், மக்கள் என ஆயிரக்கணக்கானவர்களை தூக்கிலிட்டது. நூற்றுக்கணக்கான விவசாயிகள் செனகலுக்கு சென்றுவிட்டனர். இன்றும் இறந்தவர்களின் குடும்பம் நீதிகேட்டு நிற்கிறது. ஆண்டுதோறும் 28 ஆம் தேதி போராட்டம் நடைபெற்றபடி இருக்கிறது. மனித உரிமை கண்காணிப்பகம் இதனை பதிவு செய்துள்ளது.*

***அரசு அடக்குமுறைக்கு உதாரணம் சொல்லுங்களேன்.***

*மூர் இனத்தைச் சேர்ந்த ஓமர் பெய்பாகர், ஆப்பிரிக்க மாரிடானிய மக்கள் 1989-91 ஆம் ஆண்டு தூக்கிலிடப்பட்டபோது பலரும் அறிந்த அதிகாரி. இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அந்நிகழ்வை படுகொலை என்று கூறி பேசினார். அரசு உடனே அவரை கட்டம் கட்டி பாஸ்போர்ட்டை தடை செய்து, தீவிரவாதி என முத்திரை குத்தியது. இன்னும் விசாரணை முடியவில்லை. உண்மையை பேசியதற்கு அரசு தரும் தண்டனை இது.*

***சவால்களை மீறி மனித உரிமை மீறல்களைப் பற்றிய ஆய்வறிக்கையை எப்படி தயாரித்தீர்கள்?***

*கடந்த செப்டம்பர் வரை அடிமை எதிர்ப்புக்குழுவினர் மாரிடானியாவுக்குள் நுழைய அரசு அனுமதிக்கவில்லை. இங்கிருந்த ஆய்வாளர்களும் நாட்டைவிட்டு வெளியேற அனுமதி கிடைக்கவில்லை. இதோடு ஒப்பிடும்போது எங்களுக்கு கேள்விகள் கேட்டு பதில்களைப் பெற அதிகாரிகள் மறுப்பு தெரிவிக்கவில்லை. அருகிலுள்ள நாடுகளை ஒப்பிடும்போது மாரிடானியா ஒன்றும் ஏழையான நாடல்ல. மீன்வளம்,எரிவாயு, கனிமங்கள் நிறைந்த நாடு இது. அரசியல் சீர்குலைவால்*

# 20. கொலம்பியாவை அழிவுக்கு கொண்டு சென்றவர்கள் மாஃபியா தலைவர்கள்தான்

**மரியா மெக்ஃபர்லாண்ட் சான்செஸ் மொரினோ, முன்னாள் அமெரிக்க திட்டத்தலைவர்**




கொலம்பியாவில் வன்முறை என்றதும் மறைந்த மாஃபியா தலைவர் பாப்லோ எஸ்கோபார், கொலம்பியா ஆயுதப்படை(Farg) கொரில்லாக்கள் உங்களுக்கு நினைவுக்கு வரலாம். ஆனால் நாட்டில் போதைப்பொருட்களை கடத்துவது அங்குள்ள பாராமிலிட்டரிப் படை என்பது பலரும் அறியாத ஒன்று. தொண்ணூறுகளுக்கு பிறகு அங்கு நடந்த கொலை, கொள்ளை, கற்பழிப்பு,சித்திரவதை அனைத்திலும் பாராமிலிட்டரியின் மறைமுக பங்கு உண்டு. இதுபற்றி *"There are No Dead Here,"* என்ற நூலை எழுதியுள்ளார் மரியா.

**இந்த நூலை எழுதவேண்டும் என்று எப்படி தோன்றியது?**

பாராமிலிட்டரி உள்ளிட்ட ஆயுதப்படைகளை எதிர்த்து பல்வேறு தனிமனிதர்கள் போராடியுள்ளனர். அவர்களைப் பற்றிய கதைகளை போதைப்பொருட்களை ஒழிக்கும் போராட்டத்தில் அறிந்தாலும் அப்போது எழுத முடியவில்லை. போராட்டத்தில் ஈடுபட்டவர்களின் பலம், தன்னம்பிக்கையும் அவர்களே நம்ப முடியாத ஒன்று.

***பாராமிலிட்டரி படைகள் என்பவர்கள் யார்?***

*பணக்காரர்களையும் அவர்களது வியாபாரம், சொத்துக்களைப் பாதுகாக்கும் தனியார் ராணுவப்படைகளுக்கு பாராமிலிட்டரி என்று பெயர். குறிப்பிட்ட நிலம் தேவையென்றால் உரிமையாளரை கொன்றுவிட்டு நிலத்தை கைப்பற்றிக்கொள்வார்கள். இப்படைகள் முதலில் பாப்லோ எஸ்கோபாரிடம் பணிபுரிந்தனர். எஸ்கோபாரின் இறப்புக்கு பின்னர் நாட்டில் மிகப்பெரிய போதைப்பொருள் மாஃபியாவாக உருவெடுத்தனர். பலரும் மெட்லீன் கார்டெல்லின் முன்னாள் ஊழியர்கள்தான்.*

***கொலம்பிய நாடாளுமன்றம் பாராமிலிட்டரியோடு தொடர்புகொண்டிருக்கிறதாக கூறியுள்ளீர்களே?***

*கொலை, கொள்ளை, தேர்தல் முறைகேடு ஆகியவற்றை செய்வதில் நாடாளுமன்ற உறுப்பினர்கள் 30 சதவிகிதம் பாராமிலிட்டரியோடு தொடர்புகொண்டிருக்கிறார்கள் என்பது விசாரணையில் தெரியவந்து தண்டனை பெற்றிருக்கிறார்கள் என்பது கலப்படமற்ற உண்மை.*

***பாராமிலிட்டரி பல்வேறு குற்றங்களில் ஈடுபடுவதாக கூறினாலும் மக்கள் இதனை கவனிக்கிறார்களா?***

*கொலம்பிய மக்கள் பாராமிலிட்டரியின் வன்முறைகளைக் கண்டு கடும் விரக்தியில் மூழ்கிவிட்டார்கள். கொரில்லா அல்லது பாராமிலிட்டரி படையின் செயல்களை ஏற்றுக்கொண்டால் மட்டுமே கொலம்பியாவில் வாழமுடியும். ஆர்மியும் பாராமிலிட்டரியோடு இணைந்துள்ளது என்பதை மக்களும் அறிந்திருப்பதுதான் வேதனை.*

***பாராமிலிட்டரி படைக்கு பின்னும் அதேபோன்ற படைகள் கொலம்பியாவில் உள்ள நிலையில் உங்கள் நூலின் இறுதிப்பகுதி நம்பிக்கையான வரிகளோடு நிறைகிறதே?***

*கொலம்பிய அரசும் பாராமிலிட்டரி படையும் அமைதிக்கு முயன்றாலும் முழுமையாக அது பயனளிக்கவில்லை. விளைவு இன்றும் மக்கள் சுடப்பட்டு*

*வீழ்கிறார்கள். மக்கள், பத்திரிகையாளர்கள், சமூக ஆர்வலர்கள், வழக்குரைஞர்கள் விளைவாக மாற்றம் தோன்றும்.*

***முன்னாள் அதிபர் உரைபேக்கு அறிமுகமானவர்களை சந்தித்து பேசியது எப்படி?***

*பேசிய சிலர் தங்களின் பெயரை வெளியிட மறுத்துவிட்டார்கள். முன்னாள் அதிபர் உரைபேக்கு நெருக்கமானவர்களோடு நான்கு மணிநேரங்களுக்கு அதிகமாக செலவு செய்து நேர்காணல்களை செய்தேன். உரைபே ஆன்டியோகுயாவில் கவர்னராக இருந்தபோது அவருக்கு நிர்வாகத்தில் நெருக்கமாக இருந்தவர்களிடம் பேசினேன். உரைபேயிடம் நேர்காணலுக்கு முயற்சித்தும் அனுமதி கிடைக்கவில்லை. 2004 ஆம் ஆண்டு உரைபேயை மனித உரிமை இயக்கத்தின் சார்பாக சந்தித்தேன். பாராமிலிட்டரியை கலைப்பது குறித்த அவரின் மசோதாவை ஜோஸ் விவான்கோ கேள்வி கேட்டதும், "நாட்டின் பாதுகாப்பை மேம்படுத்த முயற்சிக்கும் என்னிடம் இப்படி ஒரு கேள்வியா?" என ஆக்ரோஷமாக 30 நிமிடம் எங்களை எச்சரிக்கும்படி பேசிய உரைபே பின்னரே அமைதியாகி எங்களுடன் பல்வேறு பிரச்னைகள் பற்றி பதிலளித்தார்.*

*நன்றி: hrw.org தொகுப்பு: கா. சி. வின்சென்ட்*

